# கல்கி

ஸ்பீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

LKI • 28.02.2010 • ரூ.10.00 • 96 பக்கங்கள்







## மலேசியா ஸ்பெஷல்



# புற்றுநோய்க்கு ஒரே இடத்தில் தீர்வு

## ONE STOP SOLUTION FOR CANCER

- PET CT SCAN
- All Endoscopies
- Linear Accelerator & Brachy Therapy
- Radiation
- IGRT
- Surgical Oncology
- Medical Oncology



- பெட் சீடி ஸ்கேன்
- அனைத்து என்டோ ஸ்கோபி
- கதிர்வீச்சு
- லீனியர் ஆக்ஸிலரேடர் & உட்கதிர்வீச்சு
- IGRT
- புற்றுநோய் அறுவை சிகிச்சை
- புற்றுநோய் மருத்துவம்

**இலவச ஆலோசனைக்கு:**

**(044) 2246 9200**
**(044) 66 300 300**

PET CT CENTRE AT CANCER INSTITUTE (WIA)
CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR, CH-20

24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE

# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL



# 1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Ph: 2246 9200, 66300300 Fax : 22463282 66300400
E-mail: info@drkamakshimemorialhospital.org.
Website: drkamakshimemorialhospital.org.

# கல்கி

அடுத்த இதழ்...

வெறுங்கை என்பது மூடத்தனம்!
விரல்கள் பத்தும் மூலதனம்!

-கவிஞர். தாராபாரதி

காம்ப்ளான் கதைகள்

பொம்மை விற்கும் ஐ.டி. ஸ்டூடண்ட்!

ரிஸ்க் எடு தலைவா!

டக்குன்னு உன்னை டிக் பண்ணு!

## நாங்க முன்னேற நன்கொடை எதுக்கு?

இன்னும்... இன்னும்...
சுவாரஸ்யத் தகவல்களுடன்

## சுயமுன்னேற்றச் சிறப்பிதழ்!



மலேசியச் சிறப்பிதழ் செய்திகள்:
எஸ். சந்திரமௌலி

# சினிமா டிக்கெட் கிழித்த சில்க் சக்கரவர்த்தி!



**சினிமா தியேட்டரில் டிக்கெட் கிழித்துக் கொடுத்தவர் இன்று சில்க் சக்கரவர்த்தி. நம்ப முடிகிறதா...? யார் அவர்? மலேசியாவிலுள்ள காயத்ரி சில்க்ஸ் உரிமையாளர் ரகுமூர்த்தி. காயத்ரி சில்க்ஸ் மற்றும் அதன் சகோதர நிறுவனம் சென்னை போத்தீஸ் - இவற்றுக்கு இன்று மலேசியா முழுவதிலுமாக இருபத்து நான்கு கிளைகள். இதோ ரகுவின் வெற்றிக் கதை...**

“என் தாத்தா மலைத் தோட்டத்தில் வேலை பார்ப்பதற்காக தமிழ்நாட்டிலிருந்து மலேசியா வந்தார். இங்கேயே பிறந்து வளர்ந்த என் அப்பா, எஸ்டேட்டில் மேற்பார்வையாளராக வேலை பார்த்தார். எங்கள் உற வினர்கள் ரொம்ப வற்புறுத்தியதால் இங்கே வீடு, சொத்து எல்லாவற்றையும் விற்றுவிட்டு, இந்தியாவுக்குப் போனார். அங்கே போய் வியாபாரம் ஆரம்பித்து அதில் நஷ்டப்பட்டு மூன்று வருட காலத்தில் இறந்துவிட்டார்.

அவர் செய்த மிக நல்ல காரியம், மலேசியாவில் பிறந்த எனக்கு மலேசிய பாஸ்போர்ட் எடுத்து, இந்தியா போகிறபோது படிப்புக்கான பத்தாண்டு விசா எடுத்தது தான். அப்பா மறைந்த பிறகு, பள்ளிக்கூடத்துக்கு ஒழுங்காகப் போக முடியவில்லை; சாப்பாட்டுக்கு வசதி இல்லை. சேலத்தில் கொஞ்ச காலம் சினிமா தியேட் டரில் டிக்கெட் கிழித்தேன். அதன் பிறகு ஒரு டீக்கடையில் வேலை. நாமக்கல் கொல்லிமலை யில் மலைவாழ் இன மாணவர்களுக்கான உறை விடப் பள்ளியில் சேர்ந்து பிளஸ் டூ படிக்க வாய்ப்பு கிடைத்தது. படிப்பை முடிக்கும் தரு ணத்தில் என் பத்தாண்டு கால இந்திய விசா முடிவை நெருங்கியது. அண்ணன், என்னை மலேசியா வந்து விடும்படி அழைத்து, டிக்கெட்டுக்குப் பணம் அனுப்பி வைத்தார்.

அப்போது எனக்கு வயது 18. மலேசியா சென்றதும் ஒரு பாமாயில் தோட்டத்தில் வேலை கிடைத்தது. அதிகாலை நாலு மணிக்கு வேலைக்குப் போனால், நாள் முழுக்க வேலை செய்ய வேண்டும். மனசுக்குப் பிடிக்காமல் ஆறே மாதத்தில் அந்த வேலையை விட்டேன்.

அதன் பிறகு, ஒரு துணிக் கடையில் வேலைக்குச் சேர்த்து விட்டார் என் அண்ணன். அங்கே கடுமையாக உழைத்து,



நல்ல பெயர் வாங்கினேன். அப்போதுதான் சொந்தமாகக் கடை திறக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது.

கடனாகச் சரக்குகளை எடுத்து 1989ல் கிள்ளான் பகுதியில் 700 சதுர அடி இடம்பிடித்து காயத்ரி சில்க்ஸ் என்ற பெயரில் துணிக்கடை துவக்கினேன். பட்டுப்புடைவைகள் மட்டுமில்லாமல், வீட்டு உபயோகப் பொருள்களையும் விற்பனை செய்தேன்.

கடை வளர்ச்சி அடைந்தது. காயத்ரி சில்க்ஸ் கிளைகள் வளர ஆரம்பிக்க, எனது அடுத்த முயற்சியாக 'கேஷ் அண்ட் கேரி சூப்பர் மார்க்கெட்' ஆரம்பித்தேன். அடுத்தடுத்து மலேசியாவின் பல்வேறு நகரங்களிலும் காயத்ரி சில்க்ஸ் மற்றும் அதன் சகோதர நிறுவனமான சென்னை போத்தீஸ் ஆகியவற்றை ஆரம்பித்தேன்'' என்று மலரும் நினைவில் மூழ்கும் ரகுமூர்த்தியிடம், ''வாழ்க்கையில் ஏராளமான சவால் களை நீங்கள் சந்தித்தாலும், பிஸினஸில் ஆரம்பம் முதலே ஏறுமுகம்தானா?'' என்று கேட்டதும், ரொம்பவும் எமோஷனலாகி விட்டார்.

''1990களின் தொடக்கத்தில் மலேசியப் பொருளாதாரம் பெருத்த வீழ்ச்சியைக் கண்டது. தொழில், வர்த்தகத் துறையினர் ஆடிப் போய்விட்டார்கள். நானும் அதனால் கடுமையாகப் பாதிக்கப்பட்டேன். வரவேண்டிய பணம் வந்து சேரவில்லை. கடனில் சரக்குக் கொடுத்த மொத்த வியாபாரிகள் என்னை நெருக்கினார்கள். அப்போது ஒருவர் என்னைச் சந்தித்து, 'என் மருத்துவச் செலவுக்கு உதவி கேட்டு உங்களிடம் ஒருமுறை வந்தேன். கல்லாப் பெட்டியைத் திறந்து உள்ளேயிருந்த நோட்டுகளை எண்ணி எடுத்து, '500 ரிங்கிட்தான் இருக்கு. இதை வைச்சுக்கங்க!' என்று கொடுத்தீங்க. இப்போது உங்களுடைய கஷ்ட நிலைமையைப் பற்றிக் கேள்விப்பட்டேன். என்னால மூன்று லட்சம் வரை கடனாகக் கொடுத்து உதவ முடியும். மறுக்காம வாங்கிக்கங்க!' என்றார். நான் நெகிழ்ந்து போனேன்'' என்கிறார்.

''உங்கள் அடுத்த இலக்கு?''

''மலேசியாவுக்கு வெளியில் கிளை திறக்கணும்.''

''எங்கே?''

''இந்தோனேஷியாவுல!'' ●




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

**ஆசிரியர் குழு :**
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

**விளம்பரப் பிரிவு :**
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

**சந்தா பிரிவு :**
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

**விற்பனை பிரிவு :**
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

**சந்தா விவரம் (ஒரு வருடம்) :**
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# மலேசியத் தமிழ் அமைச்சருட

கல்லூரியில் சேரும் வயது. தந்தை மரணம் காரணமாக மலேசிய இந்திய காங்கிரஸ் அலுவலகத்தில் ஆஃபீஸ் பையனாக வேலைக்குச் சேர்ந்த அந்த மாணவன், அதே அரசியல் கட்சியின் வேட்பாளராக பாராளுமன்றத் தேர்தலில் வெற்றி பெற்று, இப்போது மலேசியக் கூட்டரசில் துணை அமைச்சர். அவர்தான் டத்தோ எம். சரவணன். தீவிர வாசகர், தேர்ந்த ரசிகர், இலக்கியவாதி, மேடைப் பேச்சாளர் என பல பரிமாணங்களைக் கொண்டவர். அவரது தாப்பா தொகுதியில் அவரோடு ஒரு ரவுண்ட் - அப்...

டத்தோ சரவணன், ஒரு சர்ச்சில் மைக் பிடித்துப் பேச ஆரம்பித்தபோது உலகளாவிய மைக் கலாசாரப்படி மைக் மக்கர் செய்ய, ''முதல்ல இந்த மைக் பிரச்னையைத் தீர்த்து வைக்கணும் போல இருக்கு'' என்று சொல்லிவிட்டு, தம் உதவியாளரிடம், ''இந்த சர்ச்சுக்கு ஒரு புதிய மைக் செட் வாங்கித் தர உடனே ஏற்பாடு செய்யுங்கள்'' என்றார். பிறகு அங்கே கூடி இருந்த மக்களின் பிரச்னைகளைக் கேட்க ஆரம்பித்தார்.

✱ மலைக் கிராமத்தில் மீட்டிங்...



நம் ஊர் போலத்தான்! ஒருவர் எழுந்து, ''ரோடு போட ஆரம்பித்தார்கள்; வேலை பாதியில் நிற்கிறது'' என்றதும், அமைச்சர் சம்பந்தப்பட்ட அதிகாரியிடம் பேசி மூன்று நாட்களில் ரோடு வேலையை முடிக்கும்படி சொன்ன கையோடு, தாமே ஒரு சிறு பத்தகத்தில் அதைக் குறித்தும் கொண்டார்.

## தொகுதி ரவுண்ட்-அப்

நகராட்சி மன்றம் கட்டிக்கொண்டிருக்கும் வணிக வளாகத்தில் ஒரு கடை வைக்க இடம் கேட்கிறார் ஒருவர். ''உங்கள் குடும்பத்தில் ஏற்கெனவே ஒருவருக்குக் கடந்தமுறை நான் கடை வாங்கிக் கொடுத்தேன். மற்றவர்களுக்கும் கொடுக்கணுமில்லையா? இந்தமுறை நான் உங்களுக்கு உதவமுடியாது. ஸாரி'' என்று 'நச்'சென்று பதில் வந்தது. அரசாங்கக் குடியிருப்பில் வசிக்கும் ஒருவர், குடியிருப்பு வளாகத்தில் உள்ள ஒரு மரத்தின் கிளை பால்கனியில் தொந்தரவாக இருப்பதாகப் புகார் செய்ய, ''நாளைக்கு அந்த மரத்தின் கிளையை வெட்ட ஆள் அனுப்பப்படும்'' என்று ஆன் தி ஸ்பாட் அறிவித்தார்.

பணத்தை அரசாங்கம் திருப்பிக் கொடுத்துவிடும்'' என்றார். அந்தப் பெண்ணின் முகத்தில் திருப்தி.

அது சைனா டவுன் பகுதி. ஒரு சின்ன ஹால் நிறைய சீனர்கள். அமைச்சர் அவர்களுடன் சிரித்துப் பேசி அளவளாவுகிறார். மத்திய வயசுப் பெண்கள் மைக் பிடித்துப் பாடி ஆடுகிறார்கள். பாட்டுக்குத் தாளம் போடுகிறார் அமைச்சர்.

# "ஸாரி, நான் உங்களுக்கு உதவ முடியாது!"

**- அமைச்சர் டத்தோ சரவணன்**



* சீனர்களுக்கு உதவி...

அடுத்து ஒரு மலைக் கிராமத்துப் பள்ளிக்கூடத்தில் மீட்டிங். மலைவாழ் மக்கள் குடும்பத்துப் பிள்ளைகளின் ஸ்கூல் ஃபீஸை அரசாங்கமே கட்ட வேண்டும். ஸ்கூலிலோ குறிப்பிட்ட நாளுக்குள் பணம் கட்டாவிட்டால் பெயரை நீக்கிவிடுவார்கள். ஆனால், அரசாங்கத்திடமிருந்து இன்னும் பணம் வரவில்லை. இது குறித்து ஓர் இளம்பெண் காரசாரமாக அமைச்சருடன் சண்டை போட, அவர் பொறுமையாக, ''இன்னும் சில நாட்களில் பணம் அனுப்பப்படும்'' என உறுதியளித்தார். அந்தப் பெண்ணோ விடாமல், ''ஏற்கெனவே ஃபீஸ் கட்டிவிட்ட பெற்றோர்களுக்கு என்ன செய்வதாக உத்தேசம்?'' என்று கேட்க, அமைச்சர், ''அவர்கள் கட்டின ஃபீஸ்

அடுக்கி வைக்கப்பட்டுள்ள எண்ணெய், நூடுல்ஸ் இன்னபிற வீட்டுச் சாமான்கள் அடங்கிய பையை வினியோகிக்கிறார். அனைவரும் அன்புடன் வழி அனுப்பி வைக்கிறார்கள்.

திரும்பும் வழியில் ஒரு முருகன் கோயில். தைப்பூசத்தைத் தொடர்ந்து உள்ளூர் கோயிலிலிருந்து தேர் புறப்பாடு.

# மலரும் நினைவுகள்!

"மலைக்காட்டில் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்த நான், பிறந்த உடனேயே என் பெரியப்பாவுக்குச் சுவீகாரமாகத் தரப்பட்டேன். எங்கே பெற்றோரிடம் திரும்பப் போய் விடுவேனோ என்ற பயத்தில் அவர்களைப் பார்க்கவும் வாய்ப்பு இல்லாமல் வளர்க்கப்பட்டேன். பெற்ற தந்தையை வாழ்க்கையில் நான் முதல்முறையாகப் பார்த்தது, என் 17வது வயதில். அப்போது அவருக்கு இறுதிச் சடங்கு" என்கிறார் டத்தோ எம். சரவணன்.

"எங்கள் பகுதியில் வசித்த தனம் என்ற பெண், நான் பள்ளிக்கூடம் சேரும் முன்பே எனக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்தார். எனவே, நான் பள்ளியில் சேர்ந்ததிலிருந்தே சிறந்த மாணவன். பள்ளியில் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த பாமகள் பாலசிங்கம் என்ற ஆசிரியை, என்னைத் தம் மகனாகவே ஏற்று, அன்பு காட்டி, பல்வேறு பேச்சுப் போட்டிகளுக்கும் தயார் செய்து அனுப்பி வைப்பார். முதல்முறையாக, திருநாவுக்கரசரைப் பற்றிய பேச்சுப் போட்டியில் கலந்துகொண்டு முதல் பரிசை வென்றேன். 1978 முதல் 86 வரையிலான காலகட்டத்தில் மாநிலத்தில் எங்கே பேச்சுப் போட்டி என்றாலும் கலந்து கொள்வேன். எப்போதும் முதலிடம் எனக்குத்தான். ஒரேயொரு முறை இரண்டாமிடம்.

கல்லூரியில் சேர வேண்டிய தருணத்தில் தந்தையின் மரணம் காரணமாகப் பகுதி நேர வேலைக்குச் செல்ல வேண்டிய சூழ்நிலை. மலேசிய இந்திய காங்கிரஸ் கட்சி அலுவலகத்தில் ஆஃபீஸ் பையனாக வேலை. கல்லூரியில் படிப்பும் தொடர்ந்தது. எனக்கு இருந்த மொழி வளம் காரணமாக, கட்சிக் கூட்டங்களில் 'அறிவிப்பாளர்' பணி தரப்பட்டது. எனது மேடை உத்திகள் மேடைப் பேச்சாளராக உயர்த்தின. கட்சியில் படிப்படியாக நான் வளர்ந்தேன். இடையில் பட்டயப் படிப்புக்காக ஒரு வருடம் லண்டன் சென்று வந்தேன்.

கட்சியில் எனக்குக் கொடுக்கப்பட்ட பொறுப்புகளில் திறம்படச் செயலாற்றினேன். 2000ஆம் ஆண்டில் நாடாளுமன்ற மேலவை உறுப்பினரானேன். 2009ல் தாப்பா நாடாளுமன்ற உறுப்பினராகப் போட்டியிட்டு ஜெயித்து, மலேசியக் கூட்டரசின் துணை அமைச்சராகப் பொறுப்பேற்று, என் பொது வாழ்க்கை தொடர்கிறது" என்கிறார்.





✱ எப்போ பீஸ் கிடைக்கும்...

அமைச்சருக்காகக் காத்திருக்காமல், தேர் புறப்பட்டுப் போய்க்கொண்டிருக்கிறது. கோயிலைத் தாண்டி, தேர் செல்லும் தெருவில் சென்று சற்று தூரத்திலேயே காரை நிறுத்திவிட்டு, தேர் முன்பாகச் சென்று, கைகூப்பிப் பிரார்த்திக்கிறார். அர்ச்சகர் தீபாராதனை காட்டி, விபூதி பிரசாதம் வழங்குகிறார். கூடி இருக்கும் மக்கள் மத்தியில் சில நிமிடம் செலவழித்துவிட்டுப் புறப்படும்போது அமைச்சர் முகத்தைக் கவனிக்கிறோம். காலை ஏழு மணிக்குப் புறப்பட்டபோது இருந்த அதே உற்சாகம். 12 மணி நேரத்துக்கும் அதிகமான பணிகள் அவரைக் களைப்படையச் செய்யவில்லை! ○

மலேசியாவில் சிறு தொழில் தொடங்க, அரசு அனுமதிக்காக விண்ணப்பிக்கும்போது, மருத்துவச் சான்றிதழும் இணைக்கவேண்டும். அதில் உங்களுக்கு சிகரெட் புகைக்கும் பழக்கமில்லை என்று டாக்டரிடம் பரிசோதித்து உறுதிப்படுத்தியிருக்கவேண்டும். புகைப்பிடிக்கும் பழக்கமுடையவர்களுக்கு சிறுதொழில் தொடங்க அரசு அனுமதியோ, பண உதவியோ கிடைக்காது. (அடடா! சிகரெட்டுக்குத் தடை விதிக்க இப்படியொரு ஐடியாவா! இது நம்ம அன்புமணி ராமதாஸுக்குத் தெரிந்திருந்தால் இந்தியாவில் அமல் படுத்தியிருப்பார்!)

❋ மலேசியாவில் ஆண்டு தோறும் பிப்ரவரி மாதம் சியாங்மாய் மலர்த் திருவிழா கொண்டாடப்படுகிறது. கொள்ளை அழகான இந்த விழா கண்கொள்ளாக் காட்சியாக இருக்குமாம்.

❋ ரோஜா மலரை காதலிக்குக் கொடு. மல்லிகை மலரை மனைவிக்குக் கொடு. ஏனெனில், முன்னதில் கவர்ச்சி உண்டு. பின்னதில் தூய்மை உண்டு. -இது மலேசியப் பழமொழி!

- அ.யாழினி பர்வதம்



# ரோஜா காதலி... மல்லிகை மனைவி!

நம் ஊரில் மாநில அளவில் கலைமாமணி, தேசிய அளவில் பத்ம விருதுகள் வழங்கப்படுவது போலவே மலேசியாவிலும் மாநில அளவிலும், தேசிய அளவிலும் டத்தோ, டத்தோ ஸ்ரீ, டான், டான்ஸ்ரீ இவற்றையெல்லாம் விட மிக உயர்ந்தது போன்ற விருதுகள் ஆண்டுதோறும் வழங்கப்படுகின்றன. பொது வாழ்வில் ஈடுபட்டுள்ள அமைச்சர்கள் மற்றும் அரசியல் தலைவர்கள், சமூகத் தொண்டர்கள், தொழில் துறையினர், கல்வியாளர்களுக்கு இவ்விருதுகள் வழங்கப்படுகின்றன.

சமீபகாலமாக சில வசதி படைத்தவர்கள், சில மாநிலங்களில், கவனிக்க வேண்டியவர்களை முறைப்படி கவனித்து விருதுகளை வாங்கி விடுகிறார்களாம்.

- சந்திரமௌலி



# சிங்கப்பூரில் மேற்படிப்பு

டெலிபோன் மணி அடிக்கிறது

'ஹலோ'

'ஹலோ சுகுமார் சாரா? வணக்கம் சார். நான் உடுமலைப் பேட்டை யிலிருந்து மனோஜ் பேசறேன் சார்'

'ஹாய் மனோஜ்! கங்கிராட்ஸ் சிங்கப்பூர் JCU விலிருந்து உன்னோட IPA அதாவது In-Principle Approval Letter for Student Pass வந்திடுச்சு. Forward பண்றேன். ப்ரிண்ட் அவுட் எடுத்து வெச்சுக்கோ. அதிலியே ஹாஸ்டல் அகாமடேஷன் ப்ளான், கட்ட வேண்டிய டெபாசிட் விபரம் எல்லாம் அட்டாச் ஆகியிருக்கு. ஏர்ப்போர்ட் பிக்-அப் form-உம் இருக்கு. Fill பண்ணி அனுப்பு. நான் யுனிவர்சிடிக்கு forward பண்ணிடறேன். Okயா? வேற என்ன வேணும்?

ரொம்ப தாங்க்ஸ் சார். என் லைஃப்லே இது ஒரு Turning Point. உங்க Blessings எப்பவும் வேணும் சார்.

என் Blessings எப்பவும் உண்டு.

26th Feb ஏர் இந்தியா எக்ஸ்ப்ரஸ் ஏர்லைன்ஸ்ல புக் பண்ணிடறேன்.

ஓ.கே. மனோஜ். நல்லா படிச்சு Indian Brains are always the Bestனு Prove பண்ணணும்.

மீண்டும் டெலிபோன் அடிக்கிறது.

Good Morning Uncle. ஆகாஷ் பேசறேன்!

Hi ஆகாஷ். உன்னுடைய Admission Offer Letter இன்னிக்கு மெயில்ல வந்திருக்கு. Oxford Brookes யூனிவர்சிடியோட Gaming & Animation Degree அட்மிஷன். இங்க முடிச்ச Diploma Details எல்லாம் சொல்லி, டைரக்ட்டா செகண்ட் இயர் என்ட்ரி வாங்கிட்டேன்! Congrats! April-ல Classes. OK? அம்மாகிட்டே சொல்லிடு

தாங்க்ஸ் uncle. ஐ யாம் வெரி எக்ஸைட்டட். தாங்க்ஸ் uncle

Bye Akash.

மீண்டும் செல்போன் ஒலி.

"சொல்லும்மா காவ்யா! எப்படி இருக்கே! அப்பா எப்படி இருக்காங்க?".

"நல்லா இருக்கேன் அங்கிள். அப்பா ஆல்ஸோ ஈஸ் ஃபைன்."

"இப்ப எதுவும் படம் பண்ணிகிட்டிருக்காரா?"



"என் ப்ரதர்தான் அங்கிள் நடிக்க ரம்பிச்சுருக்கான். ஒரு படம் ரிலீசும் பிடுச்ச."

"உங்க அப்பாவுக்கு இவனோ ரிய பசங்க இருக்கறதையே நம்ப டியல. நேத்துதான் அப்பாவுடைய நல்படம் *************** பார்த்த மாதிரி ருக்கு. சரி சொல்லுமா எதுக்குக் 'பிட்டே?

இல்ல அங்கிள், நான் MBBS டிச்சிருக்கேன். மேற்கொண்டு ங்கப்பூர்ல டெர்மட்டாலஜி ல்லேனா ரேடியாலஜியிலே MD ண்ணலாம்னு ஆசைப்படறேன். Can help me uncle?"

"Sure... நீ NUSதான் ட்ரை ண்ணனும். ஆனா I think eign Applicantsக்கு இந்த ார்ஸ் நாட் அவய்லபிள். ந்த website ரொம்பப் ாறுமையாய் பார்க்க ண்டிய site. நானும் ுபடியும் ப்ரவுஸ் பண்ணிப் ர்க்கிறேன். But, onlineலேதான் apply ண்ணனும். NUS, NTUவுக்கு Recruitment ents எல்லாம் கிடையாது. ஆனால், ன் ஒரு பத்து பன்னென்டு ப்ரைவேட் llege மற்றும் யுனிவர்சிடிகளுக்கு ficial Recruitment Agent ஆக ருக்கிறேன். நீ எதுக்கும் எங்களோட eignstudies@gmail.com அப்டிங்கற மெயிலுக்கு உன் details அனுப்பு. ப்பாவைக்கேட்டதாகச் சொல்!

ஓ.கே அங்கிள், தாங்க்ஸ் அங்கிள்.

'Bye காவ்யா!'

"ஸாரி நடராஜன். உன்னை ட்காரவெச்சுகிட்டு... ஒரே போன் ல்ஸ்.. என்ன பண்றது?"

"அதனால பரவாயில்ல சார். ஐயாம் ரீ ஒன்லி"

"சரி. Do not give resignation letter now. ident Visa வந்திடட்டும். University of ales உடைய MBA உனக்கு கிடைச்சிருக்கு. யு ஆர் லக்கி. இந்த வருஷம் உன்னை மாதிரி B.E. படிச்சுட்டு நிறைய பேர் MBA அப்ளை பண்றாங்க. நியூ ட்ரண்ட்! நேற்று கூட அருப்புக்கோட்டையிலிருந்து சத்யராஜ்ங்கற பையனுக்கு MBA in Logistics & Supply Chain Management Offered by Coventry University of U.K.க்கு அட்மிஷன் கிடைச்சிருக்கு. May மாதம் க்ளாஸ் ஆரம்பிக்குது. "சரி! 881 சிங்கப்பூர் டாலருக்கு DD வாங்கி வெச்சிருக்கேன். இந்த Xerox Copyஐ உன் ரிகார்ட்ஸ்க்காக file-ல வெச்சுக்க!"



ட.சுகுமாரன்

"தாங்க்ஸ் ஸார். IPA / Visa வந்தவுடன் சொல்லுங்க சார். அப்புறம் Resign பண்ணிக்கிறேன்."

இது எல்லாம் நடந்தது 5, வெங்கட்நாராயணா ரோடு, தி.நகர், ஸ்வர்ணாலயா ஜுவல்லரியில்தான். அதனுடைய Mg. Director சுகுமாரன் ஒரு Ex-Professor! மதுரை தியாகராஜர் கல்லூரியில் படித்து M.A. ஆங்கில இலக்கியத்தில் யுனிவர்சிடி First ரேங்க், Gold Medal வாங்கி அந்தக் காலேஜ்லேயே 10 வருஷம் அஸிஸ்டன்ட் ப்ரொபசராக வேலை செய்தவர். 1985ல் அவரது மாமனாருக்காக சென்னை லலிதா ஜுவல்லரியில் 15 வருடம் M.D. ஆக இருந்தவர். அவருடைய மகன், கணேஷ், 1999ல் மேற்படிப்புக்காக சிங்கப்பூர் போய் மேற்படிப்புப் படித்து அங்கேயே P.R. வாங்கி செட்டில் ஆகியிருக்கிறார். அதே பாதையை எல்லோருக்கும் திரு. சுகுமாரன் 10 வருடமாக சொல்லி தந்து கொண்டிருக்கிறார். அதுவும் இலவசமாக...

## Foreign Studies Bureau



பயம் - ஓர் இயல்பான உணர்ச்சி. பதற்றம் ஒரு நோய்வாய்ப்பட்ட உணர்ச்சி. எனவேதான், 'பதறாத காரியம் சிதறாது' என்றார்கள்.

நண்பனுடன் டூ வீலரில் பின்புறம் உட்கார்ந்து செல்கிறோம். அவன் நெரிசலான சென்னை நகரின் சிக்னல் பற்றிக் கவலைப் படாமல் படுவேகமாகச் செல்கிறான். அப்போது ஏற்படுவது பயம்.

மாறாக, நம் நண்பன் மிகவும் நிதானமாகச் சாலைவிதிகளைக் கடைபிடித்துச் சரியான வேகத்தில் பயணிக்கும்போது, 'திடீர்னு லாரி வந்து மோதினா என்ன பண்றது...' என்றோ, ''என்னையறியாமல் பைக்கிலிருந்து கீழே குதித்துவிட்டால் என்னாகும்?' என்றோ எண்ண ஓட்டங்கள் மனத்தில் ஓட, அவ்வப்போது, ''பார்த்துடா'' என ஓட்டுபவரையும் டென்ஷன் ஆக்கினால் இது பதற்றம்.

பள்ளிக்குச் செல்லும் குழந்தையை ஜாக்கிரதையாக அனுப்புவதும், அதன் பாதுகாப்புக்காக ஆலோசனைகள் கூறுவதும் இயல்பான விஷயம். ஆனால், குழந்தை வீடு திரும்பச் சில நிமிடங்கள் தாமதமானாலும் 'ஏதாவது விபத்தோ?', 'நம்ம குழந்தையை யாராவது கடத்திட்டுப் போயிருப்பாங்களோ?' என்றெல்லாம் யோசிப்பது பதற்றம்.

இன்றைய நவீன தகவல் தொழில்நுட்ப யுகத்தில் பதற்றப் பட்டியலில் புதிதாகவும் ஒன்று சேர்ந்துள்ளது. இளைஞர்கள் மற்றும் நடுத்தர வயதுக்காரர்களிடையே அதிகமாக ஏற்படும். இந்தப் பதற்றத்தை 'ரிங் ஸைடி' என்கிறார்கள்.

# எஸ்.எம்.எஸ் சிண்ட்ரோம்






7

# மாண்புமிகு மனம்

டாக்டர் பி.ஆனந்தன்

இதற்கான அறிகுறிகளில் சில இதோ... ● எப்போதும் செல்ஃபோனை கையில் வைத்துக்கொண்டு எதையாவது பேசுவது அல்லது எஸ்.எம்.எஸ் செய்வது. ● ஏதோ பெரிய பொறுப்பில் இருந்து, செல் ஃபோனில் வரும் தகவல்களைக் கொண்டு தான் வணிகமே நடக்க முடியும் என்பது வேறு விஷயம். ஆனால், அப்படி எதுவும் இல்லாதபோதும் செல்ஃபோனில் சார்ஜ் போய்விட்டால் பதறி, வியர்த்துப் போய் நிற்பதோடு, தனக்குத் தெரிந்த நபர்களுக் கெல்லாம் ஃபோன் செய்து இந்த விவரத்தைக் கூறுவது. ● செல்ஃபோன் தொலைந்து விட்டால், உடனடியாக வேறொரு செல்ஃபோனை வாங்கி, நண்பர் களையெல்லாம் தொடர்பு கொண்டு புதிய எண்ணைக் கூறும்வரை உண்டாகும் அமைதியின்மை. ● தனியாக இருக்கும் போது செல்ஃபோன் ஒலி கேட்பதுபோல் இருக்கும். எடுத்துப்பார்த்தால் அப்படி எதுவும் இருக்காது. ● பார்வைக் குறைபாடு உள்ளவர்கள் எப்போதும் மூக்குக் கண் ணாடி அணிவதுபோல, சாப்பிடும்போதும், பாத்ரூம் செல்லும்போதும், கோயிலுக்குப் போகும்போதும், ஏன் தூங்கும்போதுங்கூட கையில் எப்போதும் செல்ஃபோனை வைத்திருப்பது போன்றவை.

சமீபத்தில் எஸ்.எம்.எஸ்ஸால் விவாக ரத்துகள் அதிகரித்திருப்பதாக டெல்லியில் நடைபெற்ற ஓர் ஆராய்ச்சி கூறுகிறது.

முன்பெல்லாம் மனைவியிடம் சண்டை போட்டுவிட்டு கணவன் அலுவல கம் போனால், மாலை வீட்டுக்கு வரும் வரை இருவருக்கும் அதே சிந்தனையாக இருக்கும். தன் தவற்றை உணர்ந்த கணவன் 'எப்போடா வீட்டுக்குப் போய் மனைவி யிடம் மன்னிப்புக் கேட்போம்' என்று தவித்துக்கொண்டிருப்பான். மாலை ஆன வுடன் மனைவியும் குளித்து, மல்லிகைப்பூ மணக்க, கணவனுக்காக வழிமேல் விழி

வைத்துக் காத்திருப்பாள். அவன் வந்தவுடன் ''மன்னிச்சுடுங்க. நான் அப்படிப் பேசியிருக்கக்கூடாது. உங்களுக்கு ஆஃபிஸிலே எத்தனை டென்ஷனோ'' என்று கூற, பதிலுக்கு அவன், ''நீ காலையிலிருந்து குடும்பத்துக்காக உழைக்கிறே. உன்கிட்டே நானும் அவ்வளவு கோபப்பட்டிருக்கக் கூடாது'' என்பான். ஆக இருவரும் வருந்தி, உருகி, அணைத்து, அழுது... இதுபோன்ற சிறு கோபங்கள் உறவை, அன்பை, பரஸ்பரத்தை அதிகரிக்கும்.

ஆனால் இப்போது? வீட்டில் சண்டை போட்டுவிட்டுக் கிளம்பும் கணவன் வழியில் சிக்னலில் வண்டி நிற்கும்போது செல்ஃபோனை எடுத்து, ''காலை வேளையிலே என் மூடையே கெடுத்திட்டே. ஏதாவது ஆக்ஸிடன்டிலே நான் செத்துப் போகப் போறேன். உனக்கும் நிம்மதி'' என்று கத்த, பதிலுக்கு அவள், ''உங்களைக் கல்யாணம் செய்துகிட்டதுக்கு நானே தற்கொலை செய்துக்கலாமான்னு நினைச்சுக்கிட்டு இருக்கேன்'' என்று சீற... விளைவுகள் பல.

இந்த மனநிலையுடன் கணவனால் வேலையில் கவனம் செலுத்த முடியாமல் போகும். 'ஒருவேளை மனைவி தற்கொலை செய்து கொண்டுவிட்டால்?' இந்த நினைப்பு உலுக்கி எடுக்க, வீட்டை செல்ஃபோனில் தொடர்பு கொண்டால் அது அடித்துக்கொண்டே இருக்கிறது. பயம் அதிகமாக, அலுவல் வேலையைப் பாதியிலேயே விட்டுவிட்டு வீட்டுக்கு வந்து பார்த்தால் மனைவி நிம்மதியாக தூங்கிக்கொண்டிருப்பாள். எழுப்பி சண்டை போட, அது அடிதடியில் வந்து நிற்கும். அடிப்படையில் யோசிக்காமல் பேசிக் கொண்டே இருந்ததன் விளைவு இது. அதற்கு செல்ஃபோன் தொடர்ந்து பயன்பட்டிருக்கிறது.

**இயல்பு வாழ்க்கை பாதிக்கப்படாமல் இருக்க, இரவு 8 மணிக்கு மேல் மூளையை 'ஸ்விட்ச் ஆஃப்' செய்யுங்கள்; செல்ஃபோனையும்!**



நமது இயல்பு வாழ்க்கை பாதிக்கப்படாமல் இருக்க இரவு எட்டு மணிக்கு மேல் மூளையை 'ஸ்விட்ச் ஆஃப்' செய்துவிடுவதுதான் சரி. இதற்கு ஒலி, ஒளி அலைகளினால் மூளையின் ரசாயனங்களை மாற்றி அமைக்கும் செல்ஃபோன், கணினி, தொலைக்காட்சி போன்றவற்றை 'ஸ்விட்ச் ஆஃப்' செய்வது நல்லது!

பெரிதாக என்ன அவசர அழைப்பு வந்துவிடப் போகிறது என்று யோசித்தால் இந்தத் தெளிவு கிடைக்கும். பேசுவதைக் குறைத்துக்கொண்டு யோசிக்கத் தொடங்குங்கள்.

(தொடரும்)

மரபணு மாற்றத்தின் பவிசு, பருத்தி விதையிலேயே பல்லைக் காட்டி விட்டது.
-ஆர்.பிரகாஷ், பொன்மலை.

அழகுக் கலை நிபுணர் கோமதியின் 'பியூட்டி டிப்ஸ்' 'சிம்ப்ளி சூப்பர்ப்'!
- எல்.மோகனசுந்தரி, கிருஷ்ணகிரி-1

'வானவில் சாப்பாடு' நல்ல தொகுப்பு. வெஜிடேரியன் உணவு பற்றிய தகவல்களும் அதன் பயன்களும் பயனுள்ள செய்தி. - 'வானவில்' மூர்த்தி, கடலூர்

பெரியக்கா குறிப்பிட்ட ''வரகரிசிக்கு ஏழு உமி'' என்ற செய்தி ஆச்சரியம் தந்தது.
- எம்.விஸ்வதா, திண்டுக்கல்-1.

கிரேஸி பதில் படித்ததும், நான் 'சிரிப்புக் கடவுளை'க் கண்டேன்.
- சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி

'வானவில் சாப்பாடு' பற்றிப் படித்ததும் அத்தனையும் சாப்பிட்டு, 'சிவப்பு, மஞ்சள், நீலம், பச்சைத் தமிழன்தான்' என்று உற்சாகமாகப் பாடத் தோன்றியது.
- சி.என்.ஸ்ரீனிவாசன், சென்னை-40

அசோகமித்ரனின் அறுபதாண்டுகட்கு முற்பட்ட கிரிக்கெட் அனுபவங்கள் மிக இனிமை.
- பத்மா ராமமூர்த்தி, சோழிங்கநல்லூர்

பற்கள் ஆரோக்கியத்தைக் காட்டும் கண்ணாடியா? அதனால்தான் தினமும் அதைப் பார்ப்பது அவசியமாகிறது!
- எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

நன்கொடை வாங்காத காலேஜ் என்ற செய்தி காதுக்குக் குளிர்ச்சி!
- ஜி.வெங்கடரமணன், சென்னை

## வட்டமேஜை

'நம்மைச் சுற்றி எப்பவும் நமக்கு வேண்டியவங்க இருந்தாங்கன்னா ஹெல்த்தியா இருக்கலாம்' - 'மிர்ச்சி' சிவாவின் 'ஹெல்த் பாலிசி', 'சூப்பர்'மா!
- கே.கஸ்தூரி, காட்பாடி

## இ-மெயில் போஸ்ட்

www.kalkionline.com-ல்...

கலைஞர் காப்பீட்டுத் திட்டத்தின் கீழ் முப்பத்தைந்தாயிரம் பேர் பயனடைந்திருக்கிறார்களா? பாராட்டப்பட வேண்டிய திட்டந்தான்!
- அவைநாயகன், சென்னை

கல்கி ஆன்லைனில் இடம்பெறும் கடிதங்களுக்கு வட்டமேஜை பகுதியில் இடம் ஒதுக்க வேண்டும் என்ற கோரிக்கை நிறைவேறாவிட்டாலும், வட்டமேஜை கடிதங்களை ஆன்லைனில் இடம்பெறச் செய்தமைக்கு நன்றி!
- தர்மபதி.

**(சென்ற இதழ் முதல் ஆன்லைனில் வரும் கடிதங்கள் வட்டமேஜையில் இடம்பிடித்துள்ளனவே... நீங்க இன்னும் பார்க்கலையா...? - ஆர்.)**

# சிவப்பு, மஞ்சள், நீலம், பச்சைத் தமிழன்!





# கல்கி




2010 பிப்ரவரி 28
விரோதி மாசி 16
மலர் : 68
இதழ் : 31


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## பூனே பயங்கரம்!

"பூனே குண்டுவெடிப்பு நிகழ்வு உளவுத் துறையின் தோல்வி அல்ல. அப்பகுதியில் இத்தகையதொரு தாக்குதல் நடக்கக்கூடும் என்கிற செய்தி முன்னதாகவே கண்டறியப்பட்டதுதான்," என்கிறார் உள்துறை அமைச்சர் ப.சிதம்பரம்! அவ்வாறாயின் அக்கொடுமையை ஏன் தவிர்க்க முடியாமல் போயிற்று? ஓஷோ ஆசிரமும் வேறு சில இடங்களும் குறிவைக்கப்படலாம் என்று உளவுத்துறை எதிர்பார்த்தது; அதற்கான முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டன என்றும், ஆனால் பயங்கரவாதிகள் திட்டத்தை மாற்றி ஜெர்மன் பேக்கரியில் குண்டு வைத்துவிட்டார்கள் என்றும் விளக்கம் தரப்படுகிறது!

உளவுத் துறையின் வெற்றி, தகவல் பெறுவதில் மட்டுமல்ல; அதன் அடிப்படையில் மாற்று வியூகங்களை அமைத்து, சேதங்களைத் தவிர்ப்பதில்தான் முழுமையடைகிறது. இதற்கு உள்துறை அமைச்சகம், உளவுத் துறை, சிறப்புப் படைகள், மாநில அரசுகள் என பல தரப்பினரின் ஒருங்கிணைப்பும் ஒருமித்த செயல்பாடும் தேவை.

பாகிஸ்தானைச் சேர்ந்த ஜிஹாதி அமைப்பின் நாச வேலைதான் பூனே சம்பவம் என்பது உறுதியாகிவிட்டது. பாகிஸ்தானை இந்தியாவுடன் பேச ஒருவாறு வற்புறுத்தி, அதிகாரிகள் மட்டத்தில் பேச்சுவார்த்தை என்ற முடிவுக்கு வருகிறபோதே, பாக்.அதிருப்தியாளர்கள் இந்தப் பேச்சுவார்த்தைக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் முகமாக ஏதேனும் வன்முறையில் ஈடுபடக்கூடும் என்பது எதிர்பார்க்கப்பட்டதுதான்.

எல்லாரும் கண்டனம் பண்ணுங்க சீக்கிரம்! சீக்கிரம்!
தெலங்கானா
பயங்கரவாதம்
சிவசேனா
பூனே குண்டு வெடிப்பு




..னே குறிவைக்கப்படுகிறது என்கிற கூடுதல் உளவுத் தகவலும் இருக்க, அசம்பாவிதத்தைத் ..விர்க்க உரிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்க முடியும்.

மித்னாபூர் (மே.வங்கம்) காட்டுப் பகுதியிலோ, மாவோயிஸ்ட்டுகளைக் கைப்பற்றச் ..சன்ற சிறப்புக் காவல் படையில் (ஈஸ்டர்ன் ஃப்ராண்டியர் ரைஃபிள்ஸ்) 24 பேர் குருவிகளைப் ..பால் சுட்டுக் கொல்லப்பட்டிருக்கிறார்கள்! ஊர் மக்களோடு ஊடுருவி, சந்தைக் கூட்டத்தில் ..ன்றாகி, காவல் படையினர் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது தாக்கியிருக்கிறார்கள் ..ாவோயிஸ்ட்டுகள். காவல் படைகளுக்கு ஓய்வு ஏது...? சுழற்சி முறையில் காவல் நாளும் ..டித்துத்தானே ஆகவேண்டும்! மாவோயிஸ்ட்டுகளை எதிர்கொள்வதற்கும் சராசரி யுத்தத்துக்கும் ..வறுபாடு உண்டு. அதற்கேற்ப யுத்த சாணக்கியமும் நவீன ஆயுதப் பயிற்சியும் நம் படை ..ளுக்கு அளிக்கப்பட வேண்டும். மாவோயிஸ்ட்டுகள் (அவர்களுள் பலர் இளம்பெண்கள்!) ..திநவீன ஆயுதங்கள் கொண்டு தாக்கியதுடன், மீட்புப் படையினர் நெருங்காமலிருக்க ..ற்றிலும் கண்ணி வெடிகளைப் பதித்துவிட்டும் சென்றுள்ளனர்.

ப.சிதம்பரமோ, "மாவோயிஸ்ட்டுகளின் தாக்குதலை அவர்களுடைய ஆதரவாளர்கள் ..ட்பட அனைத்துத் தரப்பினரும் கண்டனம் செய்யவேண்டும்" என்று கேட்டுக் கொண் ..ருக்கிறார். இதில் இரண்டு கருத்துக்கு இடமில்லை. ஆனால், பேச்சு வார்த்தைக்கும் ..ிணங்காமல், வன்முறையையும் கைவிடாமல் நாசவேலை செய்யும் கூட்டத்தை அதற்குரிய ..முறையில்தான் கையாள வேண்டும். மாவோயிஸ்ட்டுகளின் துல்லியமான திட்டமிடலையும் ..ிஹாதிகளுடைய சூழ்ச்சியையும் விஞ்சும் சாமர்த்தியமே நமது படைகளுக்கும் உளவுத் ..துறைக்கும் இப்போதைய முதல் தேவை. அதற்கான முயற்சிகள், பயிற்சிகள் நடைபெற ..ள்துறை அமைச்சர் உடனே உத்தரவிடட்டும்! அறிக்கைகள், விளக்கங்களால் ஆகப்போவது ..ன்றுமில்லை!

## வானம்

என் சின்னஞ்சிறு திலீபனின்
குறுங்குடை மறைத்துவிடுமளவுக்கு
சிறிதிலும் சிறிது வானம்

## திரிந்த உலகம்

ஒளியின் வழித்தடம் அழிக்கப்பட்டு
இருளுறைநிலையில்
ஜன்னல் தாழிடப்பட்ட எனதறை
ஒன்றுமில்லையென
இயல்பாய் இருக்கிறாள் மனைவி
இயல்பு திரிந்து தேம்புகிறது
எனதுலகம்




## பால்யத்தை நனைக்கும் பாலகன்

என் செல்ல பாலகனை
உறக்கத்தில் ஆழ்த்தும் பொருட்டு
சொன்ன கதையிலிருந்து
உயிர்கொண்ட ஸர்ப்பம்
புற்று ஒன்றை நிர்மாணிக்க
உறங்கிப்போகிற மகனால்
நனையத் துவங்குகிறதென்
பால்யம்

# கதிர்பாரதி கவிதைகள்



## துத்தாவாகிய அப்பா

பார்க்குமனைத்தும்
பார்த்தமாத்திரத்திலேயே
பெயர்சூட்டிவிடும் ஞானம்
வாய்த்திருக்கிறது
ஒன்றரை வயது கபிலனுக்கு
அதற்கு முன்பிருந்த பெயர்குறித்தோ
பின்பு வரப்போகும் பெயர் பற்றியோ
அவன் கிஞ்சித்தும் கவலையுறுவதில்லை
களிகூர்ந்து அவன் சூட்டும் நாமகரணம்
ஒருபோதும் மொழியின் கூண்டுக்குள்
நிலைகொள்ளாது மேலாக
அர்த்தத்தைச் சிங்காரிக்கும்.
கல்லணையை அவனுக்கு
அறிமுகப்படுத்திய கணத்தின் முடிவில்
தேங்கித் தளும்பிய புனலை
இத்தியென அள்ளியாடினான்
வீடு மீண்டதும் கல்லணையை
பக்கெட்டில் ஊற்றி அவன்
இத்தியாடுகையில் எதிர்ப்பட்ட
எலியின் பொருட்டு
புவ்வாவென்று அலறினான்
கேட்கப்போன அப்பாவாகிய நான்
துத்தாவானேன்
துத்தா அப்பாவானால்
அப்பா என்னவாகும்?

தமிழகத்தில் பழநி என்றால், மலேசியாவில் பத்து மலை. இந்த வருடம் ஜனவரி முப்பதாம் தேதி சனிக்கிழமை அன்று தான் தைப்பூசம். ஆனால், மலேசியாவில் வியாழக்கிழமை மாலையிலிருந்தே தைப்பூசம் களைகட்டத் தொடங்கி விட்டது. மகா மாரியம்மன் கோயிலிலிருந்து வெள்ளித் தேரில் முருகன் ஊர்வலமாகப் புறப்பட்டு விடுகிறார். தேர் வரும் வழிநெடுக கடைகள் வைத்திருக்கும் தமிழர்கள், வாழை மரம் கட்டியும், பூ அலங்காரம் செய்தும் முருகனை வரவேற்கத் தயாராகி விடுகிறார்கள்.

அதேநேரத்தில் கோலாலம்பூரிலிருந்து பன்னிரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள பத்துமலைப் பகுதி குளக்கரையில் மக்கள் கூடத் தொடங்கி விடுகிறார்கள். அங்கிருந்து புறப்பட்டு, தலையில் பால் குடம் ஏந்தி கும்பல் கும்பலாக கோயிலை நோக்கி நடக்க ஆரம்பிக்கிறார்கள். வியாழன் இரவு ஆரம்பிக்கும் பக்தர்கள் வரிசை, அடுத்த 48 மணி நேரம் வரை நீடிக்கிறது. சின்னக் குழந்தைகள் முதல் வயசான பாட்டி, தாத்தாக்கள் வரை வயது வித்தியாசமில்லாமல், பத்துமலை முருகனுக்கு பால் குடமும், பால் காவடியும் எடுத்துக்கொண்டு போகிறார்கள். இந்துக்கள் மட்டுமில்லாமல் மலாய்க்காரர்களும், சீனர்களும் இதில் அடக்கம். சாதாரண நாட்களிலேயே தினமும் இரண்டாயிரம் பேர் பத்துமலை முருகனைத் தரிசிக்க வருகிறார்கள். தைப்பூசம் என்றால் கேட்க வேண்டுமா? இந்த வருஷம் முருகனைத் தரிசித்த பக்தர்கள் எண்ணிக்கை பன்னிரண்டு லட்சமாம். குழந்தைகளுக்கு, பெரியவர்களுக்கு மொட்டை போடுதல், காது குத்தல் என வேண்டுதல்களை நிறைவேற்றும் பக்தர்கள் பல்லாயிரம். காவடி தூக்கும் பக்தர்களும், அவர்கள் போடும் 'அரோகரா' கோஷங்களும் நம் கண்களையும் காதுகளையும் நிறைக்கின்றன.

பத்துமலை கோயில் வளாகமே திருவிழாக்கோலம் பூண்டு காட்சியளிக்கிறது. எந்தப் பக்கம் திரும்பினாலும் மனித தலைகள்தான். பத்துமலை வளாகத்தில் கம்பீரமாகக் காட்சியளிக்கிறது, நின்ற கோலத்தில் நிறுவப்பட்டுள்ள 140 அடி உயரம் கொண்ட வேல் முருகன் சிலை. சிமெண்ட்டில் கட்டப்பட்டு, பொன் நிற பெயின்ட்டில்





# பத்துமலை பழநி!

ஒளிரும் இந்த முருகன் சிலை 2006ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. உலகத்திலேயே மிகவும் உயரமான முருகன் சிலை.

பத்துமலை கருங்கல்லல்ல. சுண்ணாம்புப் பாறைதான்! இதன் ஒரிஜினல் நிறம் வெள்ளை என்றாலும், இதன் மேற்பகுதியிலுள்ள தாவரங்களும் மழை நீரால் ஏற்பட்ட பசும்பாசியும் சேர்ந்து மலையைப் பசுமை நிறமாக்கி விட்டன. மலையின் மேற்பகுதியில் விழும் மழை நீர், துவாரங்கள் வழியாக உள்ளே சென்று சுண்ணாம்பைக் கரைத்து குகையை ஏற்படுத்தி விட்டது. இதைக் கண்ட மலேசியத் தமிழர்களான தம்புசாமிப் பிள்ளையும், கந்தப்பத் தேவரும், வேலும் கையுமாக மலை மீதேறிச் சென்று, குகைக்குள்ளே வேல் நட்டு, பூஜை செய்து வணங்கினார்கள். இது நடந்தது 1888ல். அடுத்த மூன்றாவது வருடம் அங்கே தைப்பூசம் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

ஆனால், அன்றைய கோலாலம்பூர் மாவட்ட ஆட்சியாளர் ஜோஸின் கண்ணை, இந்த வேல் ரொம்பவே உறுத்தியது.





வேலைப் பிடுங்கி எறிய உத்தர விட்டார். தமிழ் மக்கள் வெகுண்டெழுந்து கோர்ட்டுக்குப் போனார்கள். பத்துமலையில் நடப்பட்ட வெறும் வேல், வழக்கில் வெற்றி வேல் ஆனது. அன்று முதல் பத்துமலை, மலேசிய இந்துக்களின் முக்கிய வழிபாட்டுத் தலம்.

பக்தர்கள் மலை மேல் ஏறிச் சென்று முருகனை வழிபட மரத்தாலான படிக்கட்டுகள் அமைக்கப்பட்டன. பிறகு ஆண்டுதோறும் பக்தர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போனதால், சிமெண்ட்டால் ஆன இரு வழி படிக்கட்டுகள் கட்டப்பட்டன. இந்தத் திருப்பணிக்காக மலேசியத் தமிழ் மக்கள் தங்கள் ஒருநாள் ஊதியத்தை நன்கொடையாகக் கொடுத்தார்கள். 1975ல், மூன்றாவது படிக்கட்டு அடிக்கல் நாட்டு விழாவில் அன்றைய சிலாங்கூர் மாநில முதலமைச்சராக இருந்த டத்தோ ஹருண் கலந்து கொண்டு, மாநில அரசின் சார்பில் 40 ஆயிரம் வெள்ளி நன்கொடை அளித்தார். நாளடைவில் மின் விளக்கு, குடிநீர், சித்திரக் கோபுர நுழைவாயில்கள் என வசதிகள் பெருகின.



**அரசு விடுமுறை விடும் அளவுக்கு மலேசியாவில் தைப்பூசம் மிக முக்கியமான திருவிழா!**

இதற்கிடையில் சுண்ணாம்புக்கல்லுக்கு நல்ல கிராக்கி இருப்பது கண்ட சில தனியார் நிறுவனங்கள், பத்துமலையில் கல்லுடைப்பு காண்டிராக்ட் எடுத்தன. இதனால் முருகன் கோயிலே தகர்ந்துபோய்விடுமோ என்ற அச்சம் பக்தர்கள் மனத்தில் எழுந்தது. தமிழ் அமைப்புகள் இந்தக் கல்லுடைப்பை நிறுத்தக் கோரிக்கை விடுத்தன. ஆனால், பலனின்றி கல்லுடைப்புகள் தொடர்ந்தன. பத்துமலை கோயில் நிர்வாகிகளின் ஏற்பாட்டின் பேரில், '78ல் தைப்பூசத்துக்குக் கோவிலுக்கு வந்த பிரதமர் டத்தோ உசேன் ஒனிடம் முறையிடப்பட்டது. சட்டரீதியிலும் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. ஒருவழியாக பத்துமலையில் கல்லுடைப்புப் பணிகள் முடிவுக்கு வந்தன. அதுமட்டுமில்லை; 1980ஆம் ஆண்டு முதல் தைப்பூசத்துக்குப் பொது விடுமுறையும் அறிவிக்கப்பட்டது.

வெள்ளித் தேர் ஊர்வலம் வரும் முக்கிய சாலையின் இரண்டு இடங்களில், பாதசாரிகள் சாலையைக் கடக்க மேம்பால நடைபாதை அமைக்கப்பட்டுள்ளது. தேரின் உயரமோ 21 அடி. இதைக் கருத்தில் கொண்ட அரசாங்கம், அணைகளில் அமைக்கப்படும் மதகுகளைப் போல, மேம்பால நடைபாதையை மட்டும் அப்படியே மேலும் உயர்த்தி, கீழே முருகனின் தேர் தடையின்றி செல்ல வழி செய்து கொடுத்திருக்கிறது!

தரையிலிருந்து 272 படிகள் மேலே ஏறிச் சென்றுதான் முருகனைத் தரிசிக்க வேண்டும். முருகன் தரிசனத்தோடு கண்டு ரசிக்க வேண்டிய பல முக்கிய விஷயங்களும் அங்கே இருக்கின்றன. இறைமணம் பொங்கும் மலையடிவாரக் கலைக்கூடம், வள்ளுவர் சிலையும், குறட்பாக்கள் பொறித்த சலவைக் கற்களும் கொண்ட வள்ளுவர் கோட்டம், ராமாயணக் குகையின் சிற்பங்கள்... இவை தவிர, 60 அடி உயர ஆஞ்சநேயர் சிலை, வண்ணமீன்கள் துள்ளி விளையாடும் திருக்குளம், நீரூற்றுகள், வேங்கடாசலபதி திருக்கோயில் என கண்களுக்கும் மனத்துக்கும் இதமான ஏற்பாடுகள் ஏராளம்!

# நூல் அறிமுகம்

## ஈஸியா சுவாசிக்கலாம்!

**அலர்ஜியை தள்ளு... ஆஸ்துமாவை வெல்லு! - டாக்டர் ஆர்.ஸ்ரீதரன், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002, விலை ரூ.60/-**




'ஆஸ்துமா... பயம் வேண்டாம்!' - இதைத்தான் இந்த நூல் மூலம் சொல்ல விழைகிறார் ஆசிரியர். ஆஸ்துமா நோய் பற்றிய அறிமுகம் தொடங்கி, அதற்கான காரணங்கள், விளைவுகள், சிகிச்சை முறைகள் அனைத்தையும் விளக்குகிறார். வாசகர்களின் சந்தேகங்களுக்கும், கேள்விகளுக்கும் இவர் அளித்துள்ள விளக்கங்களும் நூலில் இடம்பெற்றுள்ளன. இந்நோய் குறித்த தவறான கருத்தாக்கங்களும் நம்பிக்கைகளும், சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. அலர்ஜி இந்நோய்க்கு எப்படி அடிப்படைக் காரணி என்பதையும், அதனை என்னென்ன வகைகளில் தவிர்க்கலாம் என்றும் வழிகாட்டுகிறது நூல்.

அலர்ஜி தவிர அன்றாடப் பழக்க வழக்கங்களும் இந்நோய்க்குக் காரணமாக அமையக் கூடுமாம். சான்றாகப் புகைப் பழக்கம். 'சுற்றுப்புறச் சுழலில் உள்ள சிகரெட் புகையை சுவாசிப்பதால், புகைப் பிடிக்காதவர்களுக்கு ஏற்படும் மரணங்கள், உலகம் முழுவதும் நிகழும் மரணங்களில், தவிர்க்கக்கூடிய மரணங்களின் பட்டியலில் மூன்றாவது இடத்தில் இருந்துகொண்டு நம்மை பயமுறுத்துகிறது' - இது போன்ற அதிர்ச்சியான, அவசியமான உண்மைகளை ஆங்காங்கே எடுத்துச் சொல்கிறது நூல்.

ஆஸ்துமாவால் அவதிப்படும் பலரும் இந்நூலை வாசித்தால் சரியான சிகிச்சை பற்றி யோசிக்கலாம் - ஈஸியா சுவாசிக்கலாம்!

**தென்பாண்டி நாட்டுத் திருக்கோயில்கள் - சாமண்டிதாசு, மணிமேகலைப் பிரசுரம், எண்.41, தணிகாசலம் சாலை, தியாகராய நகர், சென்னை - 17, விலை ரூ.75/-**




கம்பம் முதல் மதுரை இடையிலான ஊர்களில் உள்ள திருக்கோயில்கள் பற்றிய செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன. பாண்டியர்கள் குறித்த வரலாற்றுச் சுருக்கம், பிற சமயங்கள் குறித்த கட்டுரைகள், கல்வெட்டுச் செய்திகள் என தகவல் கருவூலமாக செய்திகள். கோயில்கள் பற்றிய தல வரலாறுகளும், அவை சார்ந்த பாடல்களும் வாசிப்பில் சுவாரஸ்யம்! - **நேயமுகில்**



# ராஜாதிராஜ ராஜ கம்பீர.

மலேசிய அரசியலமைப்பு இங்கிலாந்து 'வெஸ்ட்மின்ஸ்டர் (Westminster) பாராளுமன்ற பாணியின் காப்பி. அரசியலமைப்பில் மன்னராட்சியும், பாராளுமன்ற ஜனநாயகமும் ஒன்றிணைக்கப்பட்டு உருவாக்கப்பட்டிருக்கிறது (Constitutional monarchy and parliamentary democracy). மலேசியா 1957-ல் ஆங்கிலேயரிடமிருந்து சுதந்திரம் பெறுவதற்கு முன், ஒன்பது சமஸ்தானங்களையும், பிரிட்டிஷ் செட்டில்மெண்ட் என்ற இரண்டு மாகாணங்களையும் கொண்டிருந்தது. ஒன்பது சமஸ்தானங்களில் மலாய் மன்னர்கள் ஆட்சி புரிந்து வந்தனர். பிரிட்டிஷ் செட்டில்மெண்ட் மாகாணங்களில் ஆங்கிலேயரின் நேரடி ஆட்சி நடந்ததால், அங்கே பிரிட்டிஷ் கவர்னர்கள் அமர்த்தப்பட்டிருந்தனர்.




1963-ல் மலேயா, மலேசியாவாக மலர்ந்தது. சிங்கப்பூருடன், பிரிட்டிஷ் போர்னியோவின் சபா, சராவாக் மாகாணங்களும் இணைந்தன. 1965ல் சிங்கப்பூர், மலேசியாவிலிருந்து பிரிந்தது. இன்றைய மலேசியா பதின்மூன்று மாகாணங்களைக் கொண்டிருக்கிறது. இவற்றுள் ஒன்பதில் மன்னர்கள் இருக்கிறார்கள். மீதமுள்ள நான்கில் கவர்னர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

அரசியலமைப்பில் இங்கிலாந்தைப் பின்பற்றும் மலேசியாவுக்கு, ஒரு விஷயத்தில் மட்டும் இக்கட்டான நிலை. இங்கிலாந்தில் ஒரே அரச குடும்பத்தைச் சார்ந்தவர்களே பரம்பரைபரம்பரையாக மன்னராகவோ மகாராணியாகவோ வந்துகொண்டிருப்பார்கள். ஆனால், மலேசியாவில் ஒன்பது சமஸ்தான மன்னர்கள் சம அந்தஸ்து பெற்றவர்கள். இவர்களில் ஒருவர்

பேரரசர் பதவிக்கு வர அழகான தீர்வு ஒன்றைக் கண்டுபிடித்தார்கள். இந்த ஒன்பது மன்னர்களும் ஐந்து வருடங்களுக்கு ஒரு முறை ஒன்றுகூடி, தங்களுக்கிடையே ஒரு வரை மாமன்னர் பதவிக்குத் தேர்ந்தெடுப்பர். ஒவ்வொரு சமஸ்தான மன்னருக்கும் வரிசை முறையில் பேரரசர் பதவி வகிக்க வாய்ப்பு கிடைக்கும். பேரரசராகப் பதவியேற்ற மன்னர், தம்முடைய சமஸ்தானத்தின் தற்காலிக ஆட்சியாளராக ஒரு வாரிசை நியமிப்பார். பதவிக்காலம் முடிந்தபின் சமஸ்தானத்துக்குத் திரும்பி வந்து, 'சாதா' மன்னர் பதவியைப் பெற்றுக்கொள்வார்!

மலேசியப் பேரரசரின் அதிகாரம் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒன்று பிரதம

# ராக்... பராக்...

மந்திரியின் ஆலோசனையின் மேல் செயல்படுதல். மற்றொன்று சொந்தமாகப் பிரயோகிக்கும் அதிகாரங்கள். பாராளுமன்றத்தைத் திறப்பது கலைப்பது; பிரதம மந்திரி சிபாரிசின் படி மந்திரிசபை அமைப்பது; நீதிபதிகளை நியமிப்பது; விசாரணைக் குழு அமைத்தல்; மேல் சபைக்கு செனட்டர்களை நியமித்தல்... போன்றவை பேரரசரின் பொறுப்புகள்.

மலேசியாவின் அதிகாரபூர்வ சமயம் இஸ்லாம். அதன் தலைமைத்துவத்தை மன்னரே ஏற்றிருப்பார். முப்படைகளின் தளபதியாகவும் இருக்கிறார். மலேசிய மக்கள், பேரரசருக்குப் பெரும் மதிப்பளித்துப் போற்றுகின்றனர். மேன்மை தங்கிய பேரரசர், அவ்வப்போது பொதுமக்களுக்கு அறிவுரைகளும் வழங்குவார். இன்றைய பேரரசர் மேன்மை தங்கிய துவாங்கு மிஸான் ஜைனல் ஆபிதீன். அவரின் துணைவியார் பேரரசி துவாங்கு நூர் ஜஹிரா. திரங்காணு என்ற சமஸ்தானத்தின் மன்னர் இவர். பேரரசராக 2012வரை இருப்பார்.

- ஏ.வி.எம்.ஹாஜா



* துவாங்கு மிஸான் ஜைனல் ஆபிதீன்

● லாவண்யா, டெல்லி

**நீங்களும் சிக்ஸ்பேக் வைத்துக் கொள்வதுதானே?**

இந்த வயதில் நான் அதற்கு ஆசைப்பட்டால், அது 'கண் கெட்ட பிறகு சூர்யாவா' என்றாகிவிடும்!

● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

**லவ் மேரேஜ் - அரேஞ்சுடு மேரேஜ் எது பெஸ்ட்?**

லவ் மேரேஜ் பெஸ்ட். அனைவரும் ஒப்புக்கொள்வதால் அரேஞ்சுடு மேரேஜ் 'ஆல் தி பெஸ்ட்'

● எம்.அசோக்ராஜா, திருச்சி

**தாயின் கட்டளை, தாரத்தின் கட்டளை தாங்கள் எதற்கு அடிபணிவீர்கள்?**

தாயின் கட்டளைக்கு 'அடி'பணிவேன். தாரத்தின் கட்டளைக்கு அங்குலம்தான் பணிவேன்; பன்னிரண்டு அங்குலம்!

● பி.பாரதி, ஹாப்ளி.

**'உலகமே நாடக மேடை, அதில் மக்களெல்லாம் நடிகர்கள்' என்று ஷேக்ஸ்பியர் சொன்னாராம். அப்ப கடவுள் யார்?**

வேடிக்கை பார்க்கும் Godடியன்ஸ்!

● ஆர்.அஜிதா, கம்பம்

**முதுகைப் பார்க்கும் வசதி நம் தலைக்குத் தரப்பட்டிருந்தால்...?**

துரத்தும் எதிரி நாட்டு மன்னனுக்கு 'வெவ்வெவ்வே' என்று அழகு காட்டிக் கொண்டே புறமுதுகு காட்டி ஓடலாம்!

● அ.ராஜா ரஹ்மான், பள்ளிவாசல்

**தாம்பூலம் சிவக்க என்ன செய்ய வேண்டும்? தாம்பத்யம் சிறக்க என்ன செய்ய வேண்டும்?**

தாம்பூலம் சிவக்க 'சுண்ணாம்போடு' போட வேண்டும். தாம்பத்தியம் சிறக்க அப்பப்போ 'சும்மா அன்போடு' சோப் போட வேண்டும்.

● அசோக், அரவக்குறிச்சிப்பட்டி

**கற்சிலை கடவுள் என்றால்... மனிதன்?**

கல்லுளிமங்கன்!

● ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி

**அறிமுகமில்லாத பெண்ணின் கையை ஆடவன் குலுக்கலாமா?**

அறிமுகம் செய்துகொள்ள அந்தப் பெண்ணே கையை நீட்டினால், 'அறி ஆணா' பம்பர் லாட்டரி போல குலுக்கலாம்!

● கங்கா, தஞ்சை

**முயற்சியே இல்லாமல் கிடைப்பது எது?**

'கனவு' காணாதீர்கள்...

● ச.ராஜசேகர், செய்யாறு

**தை பிறந்தால் யாருக்கு வழி பிறக்கும்?**

மாமன் மகனுக்கு. அத்'தை' பிறந்து, அத்தைக்கு அழகான ஒரு தத்'தை' பிறந்தால், சொத்'தை' மாமன் மகனுக்கு வழி பிறக்கும்.

● கிருஷ்ணராஜகோபால்,விருகம்பாக்கம்

**வழிகாட்டி, வேதாந்தி, நண்பன்... யார்?**

'ரைட்டுல திரும்பி நேரா போய் லெஃப்ட்டுல கட் பண்ணா' என்பவன் வழிகாட்டி. 'ரைட்டுல போனா யூ வில் பி லெஃப்ட் அலோன்... லெஃப்ட்டுல போனா யூ ஆர் ராங்' என்று குழப்புகிறவன் வேதாந்தி. போகும் வழி ராங்கா இருந்தாலும், அதை செட்-ரைட் செய்பவனே நண்பன்!

# சிக்ஸ் பேக்

**கிரேஸியைக் கேளுங்கள்**

● சா.ஏ.முரளி, கள்ளக்குறிச்சி

**புத்த துறவி, இந்துத் துறவி, ஜென் துறவி என்ன வித்தியாசம்?**

'கர்மத்தைச் செய்யாதே' என்பார் புத்த துறவி. 'பலனை எதிர்பாராதே' என்பார் இந்துத் துறவி. 'கர்மத்தையே பலனாகப் பார்' என்பவர் ஜென் துறவி!

● வி.பி.கே. கண்ணன்,
சின்னமனூர்

**'எதையும் தாங்கும் இதயம்' இன்று யாருக்கு அவசியம் வேண்டும்?**

யாருக்கும் தேவையில்லை. மனிதன் பிரச்னைகளை 'பை-பாஸ்' செய்யக் கற்றுக் கொண்டு விட்டான்!

ரேஸி?



ஆண்டுதோறும் மிக அதிக எண்ணிக்கையில் இந்தியாவிலிருந்து சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கும் கிழக்காசிய நாடு மலேசியா. 2008-ஆம் ஆண்டு மலேசியாவுக்கு வந்த இந்திய சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை ஐந்து லட்சத்து ஐம்பதாயிரம்; 2009ல் ஐந்து லட்சத்துத் தொண்ணூறாயிரம்! இந்திய சுற்றுலாப் பயணிகளை ஈர்க்க, மலேசிய சுற்றுலாத் துறையினர் செய்யும் மேஜிக் என்னென்ன? சென்னையில் உள்ள மலேசியா டூரிஸம் அலுவலக இயக்குனர் நூர் ஆரிப் முகம்மதுவிடம் கேட்டோம்...

"இப்போது இந்தியாவுக்கும், மலேசியாவுக்கும் இடையேயான விமானங்களின் எண்ணிக்கை கணிசமாக அதிகரித்திருக்கின்றது. குறைந்த கட்டண விமான சேவை வழங்கும் ஏர் ஏசியா, திருச்சியிலிருந்து தினம் இரண்டு விமானங்களை இயக்குகிறது. கொச்சி, திருவனந்தபுரம், கொல்கத்தா போன்ற நகரங்களிலிருந்தும் நேரடி விமான சேவை உள்ளது. அதனால், இந்திய சுற்றுலாப் பயணிகள் இன்னும் அதிக அளவில் மலேசியாவுக்கு வருவார்கள்.

இந்திய சுற்றுலாப் பயணிகளை ஈர்க்க ட்ராவல் ஏஜென்ட்களுடனும், விமானப் போக்குவரத்து நிறுவனங்களுடனும் ஒருங்கிணைந்து செயல்படுகிறோம். இன்னோர் அணுகுமுறையாக மலேசியாவின் அண்டை நாடுகளான சிங்கப்பூர், தாய்லாந்து சுற்றுலாத்துறையுடன் இணைந்து அனைவரும் பயனடையும் விதமாகச் செயல் திட்டம், கல்வி நிறுவனங்களுடன் தொடர்பு கொண்டு கல்விச் சுற்றுலாவுக்கான உதவிகள், கார்ப்பரேட் நிறுவனங்களில் பணிபுரிகிறவர்களுக்கான பேக்கேஜ் டூர்களுக்கான ஆலோசனைகள் போன்றவற்றை வழங்குகிறோம்.

அயல்நாடுகளில் வசிப்பவர்கள் மலேசியாவில் சொத்துக்கள் வாங்க ஊக்குவிக்கும், 'மலேசியா என் இரண்டாவது வீடு' திட்டத்தை அறிவித்துள்ளோம். அந்தத் திட்டத்துக்கு நாங்கள் எதிர்பார்த்ததைவிட நல்ல ரெஸ்பான்ஸ். அத்தகைய முதலீடுகள் பிஸினஸ் மற்றும் சுற்றுலா வளர்ச்சிக்குப் பெரிதும் கைகொடுக்கின்றன. எனவே, அவர்களுக்கு மட்டும் மலேசியா வருவதற்கு விசாவுக்குப் பதிலாக, பத்தாண்டுகள் செல்லுபடியாகும் ஸ்பெஷல் அனுமதியும் வழங்கப்படுகிறது

இயற்கை எழில் மிகுந்த மலேசிய கடற்கரைகள், சுற்றுச்சூழல், மருத்துவம், புத்துணர்வு, சாகஸம், ஃபார்முலா ஒன், கால்ஃப் போன்ற விளையாட்டுகளை மையப்படுத்திய சுற்றுலா... என்று பலதரப்பட்ட ஆர்வம் கொண்டவர்களுக்கு மலேசியா ஏற்ற ஒரு சுற்றுலா மையம் என்பதை விளம்பரப்படுத்துகிறோம்'' என்கிறார் நூர் ஆரிப்.



* நூர் ஆரிப் முகமது





**பரமந்த்ரவிபேதினி** - எல்லா விதமான மந்த்ரங்களின் ஸ்தானமாகவும் இருக்கக் கூடியவள். அதேசமயம் அந்த மந்த்ரங்களைக் கடந்து, அவற்றுக்கு அப்பாலும் இருக்கக்கூடியவள்.

**மூர்த்தா, அமூர்த்தா** - இந்த இரண்டு திருநாமங்களும் அம்பிகையின் முற்றிலும் மாறுபட்ட இரு வேறு நிலைகளை விவரிக்கின்றன. **மூர்த்தா** என்றால் ஒரு வடிவமாக ஸ்வரூபமாக இருப்பவள். **அமூர்த்தா** - ரூபமே இல்லாதவள் - ரூபம், வடிவம் போன்றவற்றைக் கடந்து எங்கும் நிறைபவள்.

'ஏகன் - அனேகன்' என்று ஒரே பரம்பொருள் பல மூர்த்த வடிவங்களில் உருக்கொள்கிறதே, அதேபோல்தான் அம்பிகையும் - **மூர்த்தா, அமூர்த்தா**வும்கூட.

## திருப்திக்கும் அப்பால்...

**அநித்ய த்ருப்தா** - ஏற்கெனவே **நித்ய த்ருப்தா** என்றொரு திருநாமம் வந்துள்ளது. அதை ஓரளவு சுலபமாகப் புரிந்துகொள்ள முடியும் - நித்ய த்ருப்தா என்றால் எப்போதும் திருப்தியோடு இருக்கக்கூடியவள். அநித்ய த்ருப்தா என்றால்...? திருப்தி இல்லாதவள் என்று எடுத்துக் கொள்வதா? என்றைக்குமே திருப்தி இல்லாதவள் என்று சொல்வதா? அப்படி அல்ல! மிக எளிமையாக இதற்கு அர்த்தம் பண்ணிக்கொள்ளலாம் - திருப்திப்படுத்த வேண்டும் அல்லது திருப்தி அடைய வேண்டும் என்கிற எண்ணமோ முயற்சியோ இல்லாமலே, திருப்தி என்பதைப் பற்றிய கவலை இல்லாமலே இருக்கக்கூடியவள்.

அம்பாளை நாம் பூஜை பண்ணுகிறோம். அந்தப் பூஜையினால் அவள் திருப்தி அடையக்கூடியவள் என்று நம்பி நாம் செய்கிறோம். ஆனால், அதனால் மட்டுமே அவள் திருப்தியடையக் கூடியவள் அல்ல! நாம் பூஜை பண்ணவில்லையென்றாலும் அவளுடைய திருப்தி நிலையில் எந்த மாறுதலும் இருக்காது! நித்ய த்ருப்தா என்பதற்கு எதிர்மறையான நிலைதானே அது?! ஆகவேதான் **அநித்ய த்ருப்தா** என்கிற திருநாமம். இதைச் செய்தால்தான் திருப்தி; அப்படிச் செய்தால்தான் திருப்தி என்றில்லாமல் எதையும் செய்யாவிட்டாலும், எல்லாவற்றையும் தாண்டிய திருப்தி நிலையிலே உறைபவள். தன்னுடைய குழந்தைகள் எதையும் செய்யாவிட்டாலும் அவ்வாறே இருக்கிறாள்.

**முனிமானஸஹம்ஸிகா** - **பக்தமானஸ ஹம்ஸிகா** என்றொரு திருநாமம் பார்த்தோமே, அதே மாதிரிதான் இதுவும். பக்தர்கள் மனத்தில் ஹம்ஸமாக வளைய வருபவள்தான் முனிவர்களுடைய மனமாகிற தடாகத்தில் - மானஸரோவரில் ஹம்ஸிகாவாக இருக்கிறாள்.

பக்தர்களுடைய மானஸரோவரத்தில் ஹம்ஸிகா என்கிறபோது, ஹம்ஸம் எப்படி நல்லவற்றை மட்டும் எடுத்துக்கொள்ளுமோ, அதைப் போல முனிவர்கள் மனங்களிலும் வியாபித்து அவர்களையும் அவ்வாறு தீமையிலிருந்து நன்மையைப் பிரித்துணரச் செய்கிறாள்.

## ஈசுவரனின் நாயகி

**சத்யவ்ரதா** - சத்யத்தையே விரதமாகக் கொண்டவள்.

**சத்யரூபா** - சத்யத்தைத் தன் வடிவமாகக் கொண்டவள்.

**ஸர்வ அந்தர்யாமினீ** - அந்தர்யாமினியாக எல்லாவற்றுக் குள்ளேயும் இருக்கக்கூடியவள்.

**ஸதீ** - ஸதீ என்றால் பதி விரதை என்று அர்த்தம். சதா சிவ பதிவிரதையாக இருக்கக் கூடியவள் ஸ்ரீ லலிதாம்பிகை. பரம்பொருளுக்குப் பதிவிரதை யாக இருப்பதில் அவளுக்கு அவ்வளவு சந்தோஷம்!

எதைச் சொன்னால் அம் பாள் ப்ரீதி அடைவாள் என்று தெரிந்து சொல்கிற திருநாமம் இது! அம்பிகை பரமேசுவரி தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள்தான். ஆனால், அவளுக்கு எதிலே அதிகமாக ஆசை என்றால், சிவகாமேசுவரருக்கு தர்ம பத்னியாக இருக்கக்கூடிய அந்த நிலையிலேதான் ஆசை.

அம்பாளுடைய ஸ்வரூப வர்ணனையைச் சொல்லிக்கொண்டே வருகிறார் ஆசார்யர் ஆதி சங்கரர். அவளை கேசாதி பாதம் வர்ணிக்கிறார். அப்படி வர்ணிக்கிறபோது, அம்பாளுடைய முழங்கால் பிர தேசம் (ஜானுப் பிரதேசம்) மட்டும் கெட்டிப்பட்டு அமைந்திருப்பதாக விவரிக்கிறார். மென்மையான அவள் கால்களில் அந்தப் பகுதி மட்டும் அவ்வாறு இருக்கக் காரணம்?

''உன்னுடைய பதியாக இருக்கக்கூடிய சிவகாமேசு வரரை தினந்தோறும் நீ நமஸ்காரம் பண்ணி நமஸ் காரம் பண்ணி - திரும்பத் திரும்பக் கீழே விழுந்து நமஸ்காரம் பண்ணியதால் அந்தப் பாகம் கெட்டிப் பட்டுப் போயிருக்கிறது!'' என்று நயம்படச்சொல்கிறார் ஆதிசங்கரர்.

அப்படியானால் அம்பாளுக்கு பரமேசுவரனை நமஸ்கரிப்பதில்தான் எவ்வளவு ப்ரீதி! சர்வேசுவரியாக, மஹேசுவரியாக இருந்தாலும்கூட, தான் இப்படி நமஸ் காரம் பண்ணுவதில்தான் அவளுக்கு ப்ரீதி என்கிறார் ஆசார்யர்.



## தேன் பாய்ந்த செவிகள்!

இதையே பாரதியார் வேறு விதமாகப் பாடுகிறார்:

செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே - எங்கள்/ தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே என்று பாடுகிறார். இதற்கு ரொம்ப மேலோட்டமாக அர்த்தம் சொல்கிறபோது, பாரதியார் கொஞ்சம் நாட்கள் ஃபிரெஞ்ச் பிரதேசத்தில் (புதுச்சேரி) வாழ்ந்தார்; சொந்த நாட்டைத் 'தந்தையர் நாடு' என்று அழைப்பது ஃபிரெஞ்ச் பண்பாடு. பாரதியார் ஃபிரெஞ்ச் பாதிப்பினால்தான் அவ்வாறு பாடினார் என்போம். ஆனால், பாரதிக்கு அம்பாள் கலாசாரம் மிக நன்றாகவே தெரியும்...

காவியத்தில் ப்ரீதி கொண்ட அம்பிகை அவற்றைத் தலை

சைத்து ரசிக்கிறாள்; காவிய மகரந்தத்தைப் பருகு றாள். எப்படிப் பருகுகிறாள் என்பதை ஆசார்யார் சால்கிறார்: அம்பாளுடைய காதுகள் காவியத் தனைப் பருகுகின்றனவாம். அவற்றை எப்படி ர்ணிக்கிறார் தெரியுமா? சுபுகம் - அதாவது திரவங் ளை உள்வாங்கும் குழல் (ஆங்கிலத்தில் ஃபன்னல்) ன்று அம்பாளின் செவிகளை வர்ணிக்கிறார்! 'காவி த்தேன் அவற்றின் வழியே செல்கிறது. அப்போது ம்பாளின் முகத்திலே இருக்கும் இரு விழிகளாகிய ருவண்டுகள், இங்கேயும் அங்கேயும் பாய்ந்து பாய்ந்து ந்தத் தேனை எடுத்துக் கொள்ள முயன்றன' என்று பாடுகிறார்.

அம்பாளுக்கு காதுகள்வரை நீண்ட கண்கள் அல் வா! அவற்றில் உள்ள கருவிழிகள் **சலன்மீனா லோசனா** என்பதற்கு ஏற்ப, காதுகள் வரை சென்று சென்று திரும்பினவாம்.

இவ்வாறு அம்பாளின் காவிய நுகர்ச்சியை அடிப்படையாகக் கொண்டே பாரதியார் 'இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே!' என்று பாடினார். ர்க்கரீதியாக யோசித்தால் தேனுக்கும் காதுக்கும் தொடர்பு ஏது? ஆனால் ஆசார்யர் செய்த அம்பிகை பின் வர்ணனையே அந்தக் கவிதை வரிக்கு அடிப்படை.

## சரஸ்வதியின் சங்கடம்

இதற்கப்புறம் மகாகவி அப்படியே ஒரு நாவு தாவி இன்னொரு காட்சியைப் பார்க்கிறார். சரஸ்வதி வீணை வாசித்துக் கொண்டிருக்கிறாள். அம்பாள் அதைக் கேட்டபடி அமர்ந்து, தலையை ஆட்டி ரசிக்கிறாள். சரஸ்வதி என்ன நினைத் தாளாம், 'ஆஹா; நம் இசை அவ்வளவு தூரத்துக்கு இனிமையாக இருக் கிறதே!' என்று. அந்த கணத்தில் அம்பாள் ''பேஷ்!'' என்று ஒரு வார்த்தை சொன்னாள் சரஸ் வதியை நோக்கி... அவ்வளவு தான்; உடனே சரஸ்வதி வீணையைக் கீழே வைத்து விட்டு அப்படியே உறை யைப் போட்டு மூடி விட் டாள்! ஏன்..? அம்பாளுடைய குரலே அவ்வளவு அழகு! யாழைப் பழித்த மொழியாளாக இருக்கக்கூடியவள். ஒரு பேஷ் சொன்னதே அவ்வளவு அழகாக இருந்ததென்றால், தமது இசை எம்மாத்திரம் என்று சரஸ்வதி வேகவேகமாகப் போட்டு வீணையை மூடினாளாம்!

காஞ்சி மஹாஸ்வாமி சொல் லுவார் - 'வீணையைக் கீழே வைத்தால் போதாதா? எதற்கு மூட வேண்டும்?' என்று கேட் டுவிட்டு ஒரு சுவாரஸ்யமான விளக்கமும் சொல்லுவார்:

*(வளரும்)*



# சிந்தனின் சிஷ்யர்!



* ஜி.ராமகிருஷ்ணன்

**1960-70**களில் சென்னையில் படித்துக் கொண்டிருந்த கல்லூரி மாணவர்களுக்கு கம்யூனிஸ தாக்கம் ஏற்படுவதற்கு முக்கியக் காரணம் மறைந்த தலைவர் வி.பி.சிந்தனின் போராட்ட உணர்வும், ஆவேசப் பேச்சுக்களும்தான். மார்க்ஸிஸ்டு கம்யூனிஸ்ட் கட்சியின் அகில இந்திய பொதுச்செயலாளர் பிரகாஷ் காரத், சிந்தனின் சிஷ்யர். இப்போது தமிழ்நாடு மாநிலச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள ஜி.ராமகிருஷ்ணனும் சிந்தனால் கவரப்பட்டவர்தான். வழக்கமாக மாநில மாநாட்டில்தான் செயலாளர் தேர்ந்தெடுக்கப்படுவார். ஆனால், இப்போது செயலாளராக இருக்கும் என்.வரதராஜன் உடல்நலம் காரணமாகப் பொறுப்பிலிருந்து விடுவிக்கச் சொன்னதாலும், மாநில மாநாடு 2012ம் ஆண்டுக்குத் தள்ளி வைக்கப்பட்டதாலும், திடீர் திருப்பமாக ஜி.ராமகிருஷ்ணன் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

பொதுமக்கள் மத்தியில் பரவலாக அறிமுகம் இல்லாவிட்டாலும், இயக்கத் தோழர்கள் மத்தியில் நன்கு அறிமுகமானவர் தோழர் ஜி.ஆர். 1981லிருந்து கட்சியின் முழு நேர ஊழியர். சொந்த ஊர் திருக்கோயிலூர் அருகே உள்ள மேமாளூர் கிராமம். விவசாயக் குடும்பம். ''1968ல் பட்டப் படிப்புக்காக சென்னை வந்து கலைக் கல்லூரியில் சேர்ந்தேன். அதன் பிறகு சட்டப் படிப்பு தொடர்ந்தது. பீட்டர் அல்போன்ஸ், வலம்புரி ஜான் போன்றவர்கள் கல்லூரித் தோழர்கள்.''

மாணவர் அமைப்பு, இளைஞர் அமைப்பு போன்றவற்றில் பல பொறுப்புகள் என்று வளர்ந்தார் ஜி.ஆர். ''1974ல் தாம்பரத்தில் பதுக்கலை எதிர்த்து நடந்த போராட்டத்தில் கலந்துகொண்டு 15 நாள் தண்டனை அனுபவித்தேன். அப்போது இயக்கத்தில் இருந்த என். ராமும் என்னுடன் சிறையில் இருந்தார்'' என்கிறார். கடலூரில் வழக்கறிஞர் தொழில் பார்த்துவிட்டு, நெய்வேலி சி.ஐ.டி.யூ.வில் முழு நேரப் பணி ஆற்றுவதற்காகச் சென்றார் ஜி.ஆர். அதன்பிறகு தொழிற்சங்கப் பணி, கட்சிப் பணி என்று மாநிலம் முழுதும் சென்று வந்த ஜி.ஆர். 1992ல் சென்னைக்குக் குடிபெயர்ந்தார்.

இதற்கிடையில் திருமணம். மனைவி ரீடாவும் கட்சிக்காரர் குடும்பம்தான். பெண் பார்த்தவர் சிந்தன்தான்! மற்ற முழு நேர ஊழியர்களைப் போல ஜி.ஆரும் சிம்பிள். பரங்கிமலையில் உள்ள வீட்டிலிருந்து மாம்பலம் கட்சி அலுவலகத்துக்கு தினசரி மின்சார ரயிலில்தான் பயணம். ''கட்சியில் உங்கள் செயல்திட்டம் என்ன?'' என்று கேட்டால், ''எனக்கென்று எதுவும் வகுத்துக் கொள்ள முடியாது. கட்சியில் எல்லாரும் பேசி, கருத்து ஒற்றுமை அடிப்படையில் எடுக்கப்படும் கூட்டு முடிவுதான்'' என்கிற ஜி.ஆர், ''கீழவெண்மணியில் விவசாயக் கூலித் தொழிலாளர் எரிக்கப்பட்ட நிகழ்வுதான் என்னைத் தீவிர கம்யூனிஸ்ட் ஆக்கியது'' என்கிறார்.

\- ப்ரியன்

* வி.பி.சிந்தன்



# தியாகம்



காரி, பாரி, ஓரி என்றெல்லாம் ஏழு பேரைக் கடையெழு வள்ளல்கள் என்பார்கள். பாரி வள்ளல் முல்லைக் கொடி படருவதற்காகத் தன் தேரையே கொடுத்த கதை எல்லோருக்கும் தெரியும். இன்னொருத்தன் (பேகன்) மயில் குளிரில் நடுங்குகிறதே என்று தன் உத்தரீயத்தையே எடுத்து அதற்குப் போர்த்தினானாம்.

அதியமானுக்கு சிரஞ்ஜீவித்வத்தைத் தரக்கூடிய நெல்லிக்கனி கிடைத்தது. 'நாம் சிரஞ்ஜீவியாக இருந்து என்ன சாதிக்கப் போகிறோம்? அவ்வைப் பாட்டி இருக்கிறாளே, சதாவும் லோக க்ஷேமத்தைப் பண்ணிக்கொண்டு, ஊர் ஊராக ஓடி, குழந்தைகளுக்கு உபதேசம் செய்து வருகிறாளே, அவள் திடகாத்திரத்தோடு எத்தனை ஆயுசு இருந்தாலும் அதுதான் லோகத்துக்கு நல்லது' என்று அவன் நினைத்து அவளுக்கே அந்த நெல்லிக்கனியை தானம் பண்ணிவிட்டான்.

'அதியமான் பண்ணியது. புத்தி சாலித்தனமாக இருக்கிறது. ஆனால், முல்லைக்குத் தேராவது? மயிலுக்கு எங்கேயாவது குளிருமா? அதற்குப் பட்டுப் பீதாம்பரத்தைப் போர்த்தவாவது? இதெல்லாம் புத்தி இல்லாத காரியமாக அல்லவா இருக்கிறது?' என்று கேட்கலாம். என்னைக் கேட்டால், இப்படி புத்திக்கு வேலையே இல்லாமல் முட்டாள்தனம் மாதிரி கூடத் தோன்றுகிற காரியங்களைச் செய்வதுதான் நிஜமான அன்பை, நிஜமான தியாகத்தைக் காட்டுகிறது என்பேன். அன்பு பீறிக்கொண்டு வருகிறபோது மூளையினால் அதற்கு நியாய அநியாயங்கள் பார்க்க முடியாது. இப்படித்தான், நாயன்மார்களைப் பார்த்தால் பெண்டாட்டியையே ஒருத்தர் தானம் பண்ணினார். இன்னொருத்தர் பிள்ளையையே கறி பண்ணிப் போட்டார் என்கிறபோது, இதெல்லாம் மூடத்தனம், உணர்ச்சிக் கட்டுப்பாடில்லாத காரியம் என்று சொல்லக்கூடாது. அவர்களுக்கு எப்படிப்பட்ட தியாக சிந்தனை இருந்தது என்பதுதான் முக்கியம். மூளையால் சமாதானம் சொல்ல வேண்டும் என்ற எண்ணமே இல்லாமல் உருட்டிப் புரட்டிக்கொண்டு வந்துவிட்ட தியாகம் தான் நிஜமான தியாகம் என்று என் அபிப்ராயம்.

இம்மாதிரி ஆவேசமாகப் பரோபகாரம் பண்ணின பெரியவர்கள் நம் தேசத்தில் ஆதிகாலத்திலிருந்து தொடர் முறியாமல் வந்து கொண்டேயிருந்திருக் கிறார்கள்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

**மேஷம்:**

வியாபாரம் நல்ல முன்னேற்றம் தரும். அதனால் பணப்பிரச்னை இருக்காது. புதுசா தொழில் தொடங்க யோசனை வரும். வீட்டு மனை வாங்க சாதகமான சூழல் அமையும். வெளியூர் போய் வர வாய்ப்பும் உண்டு.

**ரிஷபம்:**

கொஞ்சம் உஷாரா இருக்கணும். இப்போது எந்தப் புது முயற்சியும் தொடங்காதீங்க. வாகனத்துல போகும்போது நிதானம் தேவை. எவ்வளவு தெரிஞ்சவரா இருந்தாலும் இப்போதைக்கு சாட்சி/ஜாமீன் கையெழுத்து போடவே போடாதீங்க. பெரும் சிக்கலில் முடியும்... ஜாக்கிரதை!

**மிதுனம்:**

கல்யாணக் களைகட்டும் காலம். உற்சாகமான வேறு தகவல்களும் வந்து சேரும். கொடுத்த கடன்கள் வீடு தேடி வரும். வெளிநாடு செல்லும் வாய்ப்பு அதிகம் உண்டு.

**கடகம்:**

கடல் கடந்த மனிதர்கள் மூலம் நல்ல தகவல் வந்து சேரும். வம்பும் வழக்கும் முடிவுக்கு வரும். வேலைப் பளு குறையும். பணவசதி எவ்வளவு பெருகுதோ அதற்கு இணையாகச் செலவுகளும் கூடும்.

**சிம்மம்:**

கூட்டாளி பிரிந்து போவார். (போகட்டும் அது உங்களுக்கு நன்மையாகவே முடியும்.) பூர்விகச் சொத்து தேடி வரும். இந்த வாரம் நீங்கள் சிவனேன்னு இருந்தாலும் செல்வம் தானாகவே உங்க விலாசம் தேடி வரும். மகிழ்ச்சிக்கு அப்புறம் என்ன குறைச்சல்?

**கன்னி:**

கண்ணும் கருத்துமாய்க் காரியத்தில் இறங்கணும். எதிர்ப்புகளும் சூழ்ச்சிகளும் இந்த வாரம் கொஞ்சம் கூடுதலா இருக்கும். பூர்விகச் சொத்துல புதுசா சிக்கல் வரும். மனத்தில் இனம்புரியாத குழப்பம் நீடிக்கும். வியாபாரமும் கொஞ்சம் மந்தமாத் தான் இருக்கும். கடவுள் நம்பிக்கை கூடுதலா வேணும்.

**துலாம்:**

செலவுகளைக் கட்டுப்படுத்த முடியாது. நிலம் தொடர்பான வழக்கால் ஆதாயம் கூடும். பார்ட்னர்ஷிப் தொழில் ஏற்றம் பெறும். தொழிலில் நற்பெயரும் புகழும் ஓங்கி நிற்கும்.

**விருச்சிகம்:**

எதன் பொருட்டும் யாரிடமும் ஆர்கியூமெண்ட் வேண்டாம். வேலையில் இடமாற்றம் தவிர்க்க முடியாது. பண விஷயத்தில் கொஞ்சம் உஷாரா இருங்க. சிக்கல் வர வாய்ப்பு உண்டு. கூட்டாளியைப் பிரிய நேரிடலாம். சில பேச்சுவார்த்தைகள் தள்ளிப் போகலாம்.

**தனுசு:**

சொந்தக்காரர்களால் செலவு கூடினாலும் மனைவியால் பணவரவு அமோகமாயிருக்கும். அப்பா வழி சொத்து கைக்கு வரும் காலமிது. உள்ளூர் வழக்குகள் உங்களுக்குச் சாதகமாயிருக்கும். உத்தியோக உயர்வும் வெளிநாட்டுப் பயணமும் உங்களை நாடி வர உள்ளன.

**மகரம்:**

மகான்களின் தரிசனம் மனத்துக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும். அப்பாடா வென்று பெருமூச்சு விடுமளவு ஒரு பெரும் வழக்கு உங்களுக்குச் சாதகமாய் முடிவுக்கு வந்து விடும். வெளியூர்ப் பயணம் நிச்சயம் உண்டு. கடன் தொல்லை தீரும்.

**கும்பம்:**
செலவுகள் கட்டுக்குள் இருக்கும். அதிகாரிகளிடத்தில் பாராட்டு கிடைக்கும். புதிய தொழில் தொடங்கச் சாதகமான சூழலும் உதவியும் அமையும். குடும்ப வாழ்வு சகஜ தன்மைக்கு வரும்.

**மீனம்:** வேலையில் ஊதிய உயர்வு, வழக்கு தீர்வுக்கு வருதல், ஆபரணம் வாங்குதல், பதவி உயர்வுக்கான சூழல், வீட்டு மனை ஆதாயம், எல்லாமும் சாதக மாய் அமையும்.

# நடக்குமென்பார் நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்

21.02.10 முதல் 27.02.10 வரை



## தமிழில் எழுதத் தடை!

மலேசியாவில் புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும் - இந்தத் தலைப்பில் தமிழில் முதுகலைப் பட்டத்துக்காக மிக ஆழமாக ஆராய்ச்சி செய்திருக்கிறார் ராஜம் ராஜேந்திரன். இவர் ஓர் எழுத்தாளரும் கூட. இவருக்கு ஓர் ஆதங்கம். ''முதுகலைப் பட்டம், டாக்டர் பட்டம் என தமிழில் மேற்கொள்ளப்படும் எந்த ஓர் ஆராய்ச்சி யானாலும், ஆய்வு மாணவர்கள் தங்கள் ஆராய்ச்சிக் கட்டுரையினை தமிழில் எழுதிச் சமர்ப்பிக்க முடியாது. ஆங்கிலத்திலோ, மலாய் மொழியிலோதான் எழுத வேண்டும். எனது ஆராய்ச்சிக் கட்டுரை யில் பல புதுக் கவிதைகளையும் மலாய் மொழியில் மொழி பெயர்த்து மேற்கோள் காட்டி இருக்கிறேன்'' என்கிறார் ராஜம் ராஜேந்திரன்.






மலேசியாவில் உள்ள பெட்ரனாஸ் இரட்டைக் கோபுரம் 1998 முதல் 2004 வரை உலகின் மிக அதிக உயரம் கொண்ட கட்டிடம் என்ற பெருமையைப் பெற்றிருந்தது. அண்மையில் தொடங்கப்பட்ட புர்ஜ் துபாய் கட்டிடம், அந்தப் பெருமையைத் தட்டிப் பறித்துச் சென்றுவிட்டாலும், மலேசியர்கள் தங்கள் நாட்டு இரட்டைக் கோபுரம் குறித்து மிகவும் பெருமைப்படுகிறார்கள். ஆனந்த கிருஷ்ணன் என்ற இந்தியர் இந்த இரட்டைக் கோபுரங்களைக் கட்டி, பல்வேறு நிறுவனங்களுக்கும் விற்றுவிட்டார்.

இந்த 88 மாடிக் கட்டிடம், 120 அடி அஸ்திவாரத்தின் மீது கம்பீரமாக எழுந்து நிற்கிறது. இரண்டில் ஒரு கோபுரத்தை ஒரு ஜப்பானிய கட்டிட நிறுவனமும், இன்னொரு கோபுரத்தை கொரிய நிறுவனமும் கட்டி முடித்தன. இவற்றைக் கட்டியபோது இரும்புக்குத் தட்டுப்பாடு நிலவியதால், இரும்புக் கம்பிகளுக்குப் பதிலாக கான்கிரீட்டையே பயன்படுத்தும்படி யானது. இதனால், கட்டிடத்தின் எடை இரு மடங்கு அதிகமாகிவிட்டது.

இரண்டு கோபுரங்களையும் 41 மற்றும் 42வது மாடிகளில் இரண்டு பாலங்கள் இணைக்கின்றன. 41வது மாடியில் உள்ள பாலத்துக்குச் சென்று கோலாலம்பூர் நகரைக் கண்டு ரசிக்க, ஒரு நாளுக்கு ஆயிரத்து எழுநூறு பேருக்கு மட்டுமே அனுமதி. இதற்குக் கட்டணம் எதுவும் இல்லை.






## பாக்குத் தீவு!

முக்கியமான மலேசிய மாநிலங்களில் ஒன்று பினாங்கு. சுமார் ஆயிரம் சதுர கி.மீ. பரப்பு கொண்ட இந்தத் தீவின் மக்கள் தொகை 16 லட்சம். 13.5 கி.மீ. நீளமுள்ள கடற்பாலம் வழியாக மலேசிய நிலப்பகுதியுடன் இணைக்கப்பட்டிருக்கிறது பினாங்கு. போக்குவரத்து நெரிசலைச் சமாளிக்க இன்னொரு பாலம் கட்டப் போகிறார்களாம்.

இப்பகுதியில் பாக்கு மரங்கள் மிகுதி என்பதால், இங்கிருந்து நெடுங்காலமாக பாக்கு உலகமெங்கும் ஏற்றுமதியாகிறது! இம்மாநில அரசின் சின்னமே பாக்கு மரம்தான்.

பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் ஏராளமான ஆட்களைக் கொண்டு வந்து இங்குள்ள ரப்பர் தோட்டங்களில் அடிமைகளாக்கியதாகச் சொல்கிறார்கள். பினாங்குத் தீவில் விளையும் பாக்குகளை, பரந்தவெளிகளில் காயவைக்கும் போது கொத்திப் போக வரும் காக்கைகளை விரட்டும் பணியிலும் அமர்த்தப்பட்டனர்.

பினாங்குத் தீவில் அழகான கடற்கரைப் பகுதிகள் நிறைய உண்டு. அவற்றைச் சுத்தமாகப் பராமரிப்பதுதான் இங்குள்ள பெரிய சவால். பினாங்கிலும் தைப்பூசம் வெகு பிரசித்தம். சரி... அது என்ன பினாங்கு என்று பெயர்? மலாய் மொழியில் பாக்கு என்று பொருள். ரொம்ப அழகான பாக்குதான்!

## முப்பது வருஷ சைவம்!

"சுமார் முப்பது வருடங்களுக்கு முன்னால் என் மாமனார் மறைந்தபோது, 'ஒரு மாத காலம் அசைவம் சாப்பிடக் கூடாது' என்று வீட்டில் சொன்னார்கள். என் நெருங்கிய நண்பராக இருந்து, பின்னர் தம் மகளையே எனக்கு மணம் செய்து கொடுத்து, மாமனாராக ஆனவர் என்பதால் அவர் மீது கொண்ட அன்பு, மரியாதை காரணமாக, 'ஒரு மாதம் என்ன, இனிமேல் வாழ்நாள் முழுவதும் நான் சைவம்தான்' என்று முடிவெடுத்தேன். இன்று வரை அதை நான் கடைப்பிடித்து வருகிறேன்" என்கிறார் மலேசியத் தமிழ் அரசியல் தலைவர்களில் ஒருவரான டத்தோ சாமிவேலு. விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரனுடன் நேரடியாகத் தொலைபேசியில் பேசும் அளவுக்கு நெருக்கமாக இருந்தவர் டத்தோ சாமிவேலு.



* டத்தோ சாமிவேலு

# இரட்டைக் கோபுரம்!

# வெண்மையான பெர்முடா தீவு

வட அட்லாண்டிக் கடலில் சிவனே (ஏசுவே!) என்று அமைதியாக இருக்கும் சின்ன நாடு அது. ஆனாலும் அதன் பெயரைக் கேட்டாலே திகில், மர்மம் போன்ற பலவித குழப்பமான உணர்ச்சிகள் பலரிடையே பரவும்.

'பெர்முடா முக்கோணம்' என்ற பகுதியைக் கடந்த பல விமானங்களும், பல கப் பல்களும் திடீர் திடீரென மாயமாக மறைந்தன. கடற்கொள்ளையர்கள், இயற்கைச் சீற்றம், பைலட் அல்லது மாலுமியின் திறமையின்மை இப்படி எந்தக் காரணத்தையும் கூற முடியவில்லை. பிறகென்ன, வதந்தி வேகமாகப் பரவியது. அங்கே வேற்று கிரகவாசிகள் தங்கள் கைவரிசையைக் காட்டுகின்றனர் என்றனர் சிலர். ஆவிகளின் கைவேலை என்று அலறினார்கள் வேறு சிலர்.

பெர்முடா முக்கோணத்தில் பெர்முடா நாடும் அடக்கம்.

அமெரிக்காவின் பயிற்சி விமானமான 'ஃப்ளைட் 19' அட்லாண்டிக் கடலின் மீது பறந்து கொண்டிருந்தபோது திடீரென்று மாயமாய் மறைந்தது. தேதி - டிசம்பர் 5, 1945. அன்று மிகவும் சாதாரணமான அமைதியான தட்பவெப்பம். விமான ஓட்டியான சார்லஸ் கரோல் என்பவர் அனுபவமிக்கவர். பின் எப்படி இந்த விபரீதம்? போதாக்குறைக்கு, ''நாங்கள் வெண்மையான நீருக்குள் நுழைகிறோம். எதுவுமே இங்கு சரியில்லை. நாங்கள் எங்கே இருக்கிறோம் என்று தெரியவில்லை. அடடா, தண்ணீர் இப்போது வெண்மையாக இல்லை. பச்சையாக இருக்கிறது'' என்பதுதான் விமான ஓட்டியின் இறுதி வாக்கியங்களாம்.

திக்திக் உணர்வை அதிகப்படுத்தும்படி நடந்தது தொடர்ந்த இன்னொரு சம்பவம்! மாயமாய் மறைந்த மேற்படி விமானத்துக்கு என்னதான் ஆனது என்ற கேள்விக்கு விடைகாண 13 பேர் அடங்கிய ஒரு விமானம் அனுப்பப்பட்டது. அந்த விமானத்துக்கும் என்ன ஆனது என்றே தெரியவில்லை.

ஆக பெர்முடா தவறான காரணத்துக்காகப் புகழ்பெற்றுவிட்டது. பிரிட்டன் இன்னமும் உலகெங்கிலும் சிதறிக்கிடக்கும் சில பகுதிகளை, தன்னுடைய ஆளுமைக்கு உட்பட்டது (British Overseas ter-



ritory) என்று கூறிக் கொள்கிறது. அந்தப் பட்டியலின் பிள்ளையார் சுழி என்று பெர்முடாவைக் குறிப்பிடலாம். இந்தப் பட்டியலில் உள்ள மிக அதிக மக்கள் தொகை கொண்ட பகுதியும் பெர்முடா தான்.

பெர்முடா ஒரு தீவுக்கூட்டம்தான். 138 தீவுகள். என்றாலும் இவற்றில் மிகவும் பெரி

**நாங்கள் வெண்மையான நீருக்குள் நுழைகிறோம். எதுவுமே இங்கு சரியில்லை.**

**-சார்லஸ் கரோல், அமெரிக்க விமானி**

தான 'மெய்ன் ஐலண்ட்' எனும் தீவையே கூட பெர்முடா என்றும் குறிப் பிடுகிறார்கள்.



இன்று கூட உலகில் மிக அதிகமான கப்பல் போக்குவரத்து உள்ள பகுதிகளில் ஒன்றாக விளங்குகிறது பெர்முடா. அமெரிக்கா, ஐரோப்பா, கரீபியன் தீவு கள் அனைத்தையும் இணைக்கும் நீர்ப் போக்குவரத்து. தவிர ஃப்ளோரிடா மற்றும் பெர்முடாவுக்கிடையே உல்லா சக் கப்பல்கள் வேறு அதிக அளவில் விடப்படுகின்றன.

செயிண்ட் ஜார்ஜ் மற்றும் ஹாமில்டன் இவை இரண்டும் முறையே பெர்முடாவின் பழைய மற்றும் புதிய தலைநகரங் கள்.

நிதி வசதிக்குக் குறைவே யல்லை. முதலீடுகள் மூலமாகவும், சுற்றுலாவின் மூலமாகவும் வருமா னம் கொட்டி, உலகிலேயே

# ஆபத்து!

தனிநபர் வருமானம் மிக அதிகமாக உள்ள நாடு என்ற பெருமையை 2005ல் பெற்றது.

பெர்முடா என்ற பெயர் ஏன்? ஜுவான் பெர்முடஸ் என்பவர்தான் 1503ல் இந்தத் தீவைக் கண்டுபிடித்தார். அதனால்தான் இந்தப் பெயர். கண்டுபிடித்தவர் ஸ்பெயின் நாட்டைச் சேர்ந்தவர். கடற்பயணங்களில் மாளாத காதல் கொண்டவர்.

தொடக்கத்திலிருந்தே பேய்களும் ஆவிகளும் நிறைந்த பகுதி என்று பெர்முடாவுக்கு ஓர் அவப்பெயர் உண்டு. ''பூதங்களின் தீவு'' (Isle of Devils) என்றே இது அழைக்கப்பட்டது. அங்குள்ள காட்டு ஒநாய்களும் வேறு சில மிருகங்களும்

* பெர்முடாவின் தற்போதைய தலைநகரான ஹாமில்டனில் வசிப்பது வெறும் ஆயிரம் பேர்தான். பழைய தலைநகரமான செயின்ட் ஜார்ஜில் இதைவிடக் கொஞ்சம் அதிகமான மக்கள் தொகை!
* கறுப்பர் இனத்தவர் சுமார் 55 சதவிகிதம் வசிக்கிறார்கள். வெள்ளையர் 7 சதவிகிதம். மற்றவர்கள் கலப்பு.
* மிக அதிக அளவில் இங்கு வசிப்பவர்கள் கிறிஸ்தவர்கள்.
* ஆங்கிலம், போர்த்துக்கீஸ் ஆகிய இரண்டுமே ஆட்சி மொழிகள்.
* கல்வி அறிவு பெற்றவர்களின் எண்ணிக்கை மிக அதிகம். 98 சதவிகிதம்!
* பிரிட்டனிலிருந்து முழுமையான விடுதலை தேவையா? இப்படி ஒரு கணக்கெடுப்பு 1995ல் நடத்தப்பட்ட போது, 'தேவைதான்' என்று வாக்களித்தனர் மெஜாரிடி மக்கள்.
* பாராளுமன்ற அரசியல் முறை. சுயாட்சிதான்.
* உலகின் ஒன்பதாவது மிகச் சிறிய நாடு பெர்முடா. மக்கள் தொகை என்கிற அடிப்படையில் 31வது மிகச் சிறிய நாடு.
* சோமெர்ஸ் தீவுகள் - இதுதான் பெர்முடாவின் முந்தைய பெயர்.

## விடுதலை வேண்டும்!



எழுப்பிய குரல்கள்தான் இதற்குக் காரணம் என்பவர்களும் உண்டு. அடுத்த நூற்றாண்டில் போர்த்துகீசியர்கள், பிரிட்டிஷ்காரர்கள் போன்றோர் இத்தீவுக்கு விசிட் செய்தார்கள் என்றாலும் இங்கேயே தங்கிவிடவில்லை.

பிறகு கொஞ்சம் கொஞ்சமாகக் குடியேறத் தொடங்கினார்கள். ஆனாலும் பரப்பளவு குறைந்த நாடு என்பதால் ஓரளவு மக்கள்தொகையைக் கூட பெர்முடாவால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. பல்லாயிரக் கணக்கான பெர்முடாவாசிகள் தென் அமெரிக்காவை நோக்கிச் சென்றனர்.

இருபதாம் நூற்றாண்டுக்குள் பலவித மாற்றங்கள். பணக்கார பிரிட்டிஷ் மற்றும் அமெரிக்க சுற்றுலாப் பயணிகள் பெர்முடாவுக்கு அடிக்கடி விஜயம் செய்தனர்.

அஸ்ட்வுட் கோவ் எனப்படும் பகுதி காதலர்களின் கனவுப் பிரதேசம். கரையில் நிறைய பாறைப் பிரதேசங்கள் இருப்பதால் நீச்சல் சரியாகத் தெரியாதவர்கள் ஒதுங்கியிருப்பதே நல்லது. புகைப்படக் காரர்களுக்கு இங்கிருந்து கிளம்ப சுலபத்தில் மனம் வராது. பெர்முடா மக்கள் அணியும் உடையில் பிரிட்டிஷ் கலாசாரத் தாக்கம் அதிகமாகவே தெரியும்.

உடை பற்றிக் குறிப்பிடும்போது உலகப்புகழ்பெற்ற 'பெர்முடா ஷாட்ஸ் (Bermuda Shorts) இல்லாமலா? கால் முட்டிக்கு மூன்று இன்ச்சுகள் மேலே முடிந்துவிடும் இந்த ஷாட்ஸ். அதே சமயம் சாக்ஸ் மிக நீளமாக மேலெழும்பி முழங்காலுக்குக் கீழ்ப்பகுதியில் உள்ள கால்களைக் கிட்டத்தட்ட மறைத்துவிடும். ஆனால் ஒரு ரகசியம்! இவை பெரும்பாலும் பெர்முடாவில் உருவாக்கப்படுவதில்லை; எல்லாமே வெளிநாடுகளிலிருந்து வாங்கப்பட்டு, உள்ளூர் கடைகளின் பெயர்கள் பொறிக்கப்பட்டு விற்கப்படுகின்றன.

**தனிநபர் வருமானம் மிக அதிகமாக உள்ள நாடு என்ற பெருமையை 2005லேயே அடைந்துவிட்டது பெர்முடா.**

**(அடுத்த வாரம் - உலகின் மிகப் பெரிய அரண்மனை கொண்ட நாடு)**





**அ**திர்ச்சியா... ஏமாற்றமா... ஏதோ ஓர் எதிர்வினை. ஆக மொத்தம் அப்துல்லா நிலைகுலைந்து போனான். புனிதப் பெருநாளின் ஈதுல் பித்ர் தொழுகை முடிந்து, இமாம் 'துவா' ஓதப் போகும் இந்த இனிய நேரத்தில், இப்படி ஓர் அலைக்கழிப்பு நேருமென்று கொஞ்சமும் அவன் எதிர்பார்க்கவில்லை.

நோன்புக் கஞ்சி காய்ச்ச, முசல்லா பாய் வாங்க, பள்ளி வாசலுக்கு வெள்ளையடிக்க மற்றும் இதர பராமரிப்புக்காக அம்மகுதிக்கு உட்பட்ட தெருவாசிகள் ஆண்டு தோறும் ஹதியா கொடுப்பது வழக்கம். அதுபோல் இந்த ஆண்டும் ஹதியா வசூலித்திருந்தார்கள். அப்துல்லா ஐயாயிரம் கொடுத்திருந்தான். தொழுகை முடிந்ததும் ஜமாத்தார்கள் முன்னிலையில் ஹதியா கொடுத்தவர்கள் அறிமுகப்படுத்தப் பெற்றார்கள். ஐம்பதுக்கும் மேற்பட்ட அப்பெயர்ப் பட்டியலில் அப்துல்லாவின்

தமிழினியன்

# ஹதியா



அவர் இரும்புக்கடையில் இருந்தபோது தான் பணத்தைக் கொடுத்தான், அப்துல்லா. ரசீது புத்தகம் கைவசம் இல்லையே என்ற வருக்கு, 'பரவாயில்லை' என்று சொல்லி விட்டான். இப்போது அதை எப்படிக் கேட்பது? என்னவென்று விசாரிப்பது?

மனத்தோடு மருகிக் கொண்டிருந்தான். அவன் முகக் குறிப்பை உணர்ந்தவராகத் தானோ என்னவோ, முத்தவல்லி அவனைச் சைகையால் வெளியில் வரும்படி அழைத் தார்.

மசூதியின் புறப்பக்கமாகச் சென்ற அவரைப் பின்தொடர்ந்தான் அப்துல்லா. 'ஈத் முபாரக்' வாழ்த்துகள் பரிமாறிக் கொண்டார்கள்.

''நேற்றிரவே உங்களைச் சந்தித்துப் பேசலாம் என்றிருந்தேன். செங்கிப்பட்டி அருகில் டிராபிக் தொல்லை. இரண்டரை மணி நேரம் பஸ்ஸைப் போட்டுவிட்டார் கள். வீடு திரும்ப பதினொரு மணி ஆகி விட்டது. விடிந்ததும் சொல்லலாம் என்று படுத்துவிட்டேன். அதாவது அப்துல்லா பாய்...''

**ப**ட்டுக்கோட்டைப் பக்கமான ஒரு பேரூராட்சியில் செல்வந்தர் ஒருவர் இருக் கிறார். அவர் வருடம்தோறும் பல மசூதி களுக்கு ஹதியா கொடுப்பது வழக்கம். கணிசமான அத்தொகையை அவரே மசூ திக்குத் தேடி வந்து கொடுப்பார். இந்த வருடம் அவர் சற்று சுகவீனம். ஆகவே சிரமம் பாராமல் வந்து வாங்கிக்கொள்ளும்

பெயர் வரவில்லை. அதுதான் இப்போது குழப்பம். இத்தனைக்கும் யாரோ எவரிடம் அவன் பணம் தரவில்லை. சற்று முன் ஹதியா கொடுத்தவர்களின் பெயரை வாசித் தாரே காதர் ஷெரீப், அவரிடம்தான் ஐம்பது ரூபாய்க் கட்டை அப்படியே ஒப்படைத் திருந்தான். காதர் ஷெரிப், அப்பள்ளி வாசலுக்கு முத்தவல்லி.

ஊரில் அவர் பெரிய மனிதர். தவிர பல்வேறு வியாபாரம். அன்றைய தினம்

படி தகவல் கொடுத்திருந்தார், அவர்.

அதற்காக நேற்று முத்தவல்லி காதர் ஷெரீப் அங்கு போய் இருந்தார்.

பணத்தைப் பெற்றுக்கொண்டு அவர் வெளியேறியபோது, செல்வந்தரின் பங்களா வாசலில் ஜனத்திரள். ஆண்களும் பெண்களுமாக ஜகாத் பணம் (இனாம்) வாங்க முட்டி மோதிக்கொண்டு இருந்தார்கள். அப்போது அந்தக் கும்பலை விட்டு விலகி ஒதுக்குப்புறமாய் ஒரு பெண். முக்காடு போட்டிருந்தாள். மத்திம வயதுதான் இருக்கும். வழியில் போகிறவர்களை எல்லாம் ஏதோ ஓர் எதிர்பார்ப்பில் ஏக்கத்துடன் பார்த்துக்கொண்டிருந்தாள். வாய்விட்டுக் கேட்காவிட்டாலும் உதவிக்காக ஏங்கும் பரிதவிப்பு அப்பட்டமாகத் தெரிந்தது அவளது முகத்தில். அது மட்டுமல்ல, வாழ்ந்து கெட்ட குடும்பம் என்பார்களே அது போன்ற ஒரு பின்னணியும் அப்பெண்ணின் சாயலில் தெரிந்தது. ஆகவே அப்பெண்ணை விசாரிக்க வேண்டியது தம் கடமை என எண்ணினார், காதர் ஷெரீப்.

''யாரம்மா நீங்க... என்ன வேண்டும்?''

கேட்ட மாத்திரத்தில் அப்பெண் கண் கலங்க, கண்ணீர் பொலபொலவென்று கொட்டியது.

''அழாதீங்கம்மா. நீங்க யார்... உங்களுக்கு என்ன வேண்டும்... சொல்லுங்கம்மா...''

''நாங்க... நாங்க நல்லக் குடும்பத்தைச் சேர்ந்தவங்க, பாய்... என் வீட்டுக்காரருக்கு மீன்பிடித் தொழில். போதுமான சம்பாத்தியம்தான். ரெண்டு குழந்தைகளோடு சந்தோஷமாகத்தான் இருந்தோம். எங்கள் போதாத காலம்... திடீர்னு அவருக்கு வாதநோய் வந்துடுச்சு. ஓடியாட முடியாமல் படுத்துட்டார். மூணு நாளா மழை வேறே. வீடு ஒழுகி பாய் இல்லாமல் ஈரத் தரையிலே படுத்ததிலே குழந்தைகளுக்கு ஜுரம். பள்ளிவாசலிலே ஊத்துற நோன்புக் கஞ்சியிலேதான் இப்ப பசியாறிட்டிருக்கிறோம். இன்னியோடு அதுவும் முடிஞ்சுடும். நாளைக்கு என்ன பண்ணறதுன்னு தெரியல்லை. நீங்க மனசு வைச்சுக் கேட்டீங்கன்னு என் இல்லாமையைச் சொல்லிட்டேன். எனக்கு யார்கிட்டேயும் கையேந்திக் கேட்கவும் சங்கடமாக இருக்கு. அதனால்தான் பங்களாவிலே ஜக்காத் வாங்கலாமா வேண்டாமான்னு யோசிச்சுட்டு நிக்கிறேன்...'' அழுகை அவளைப் பேச விடாமல் தடுத்தது.

''உங்களுக்கு உதவி செய்ய வேறு யாரும் இல்லையா'' பச்சாதாபத்துடன் கேட்டார், காதர் ஷெரீப்.

''கூடப் பிறந்த அண்ணன் ரெண்டு பேரு. சின்னவரு இறந்துட்டார். மூத்த அண்ணன் இருக்கிறார்.''

''அவர் எதுவும் உதவி செய்ய மாட்டாரா?''

''செய்...வா...ரு. ஆனா அவருக்கென்ன

''மன்னா... எதிரி மன்னன் போர்த் தூதுவனை அனுப்பியுள்ளான்.''

''நான் போர்ப் பயிற்சியில் இருப்பதாகக் கூறி விடு.''

''நம்பும்படியான பொய்யைச் சொல்லுங்கள் மன்னா...!''

- எம்.அசோக்ராஜா



கஷ்டமோ தெரியல்லை. ரெண்டு மாச மாச்சு. மூணு கார்டு போட்டேன். பதில் இல்லை. சலூன் பாய் பூத்திலே இருந்து ஃபோன் பண்ணினேன். மணி அடிச்சுட்டே இருக்கு. எடுக்கலை...''

''எந்த ஊரில் இருக்கிறார்?''

''திருச்சியிலே அவருக்கு வேலை. குடும்பத்தோடு அங்கேயே இருக்கார்.''

''நானும் திருச்சிதான். அங்கே அவருக்கு எங்கே வேலை? பெயர் என்ன?''

வேலை செய்யும் கம்பெனி பெயரைச் சொல்லி, ''அண்ணன் பெயர் அப்துல்லா'' என்றாள் அவள்.

''அப்துல்லாவா...? சிவப்பாய்... ஒல்லியாய்... உயரமாய் அடி உதட்டிலே மிளகு மாதிரி ஒரு மரு இருக்குமே... அவரா?''

''ஆமாம் பாய்... அவரே தான்... உங்களுக்கு அவரைத் தெரியுமா?''

''நல்லாவே தெரியும். உங்க பெயர் என்னம்மா?''

''பஹ்ருன்னிஷா.'

''கவலைப்படாதீங்க, கூடிய சீக்கிரம் உங்களுக்கு நல்ல செய்தி வரும்.''

**ந**ம்பிக்கை அளித்துவிட்டு வந்த சம்பவத்தைக் கூறி முடித்த காதர் ஷெரீப், அப்துல்லாவின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார். குழப்பமான முகத்துடன் மௌனமாய் நின்றான், அவன்.

''பஹ்ருன்னிஷா... உங்க தங்கை தானே?''

''ஆமாம்.''

''நான் ஒன்று சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே?''

''சொல்லுங்க ஜீ.''

''ஊரிலே உங்ககூடப் பிறந்த தங்கச்சியோட குடும்பம் படுக்கப் பாய் இல்லாமல் தவிச்சுட்டிருக்கு. நீங்க இங்கே பள்ளி வாசலுக்கு ஹதியா கொடுத்திருக்கிறீங்க. உங்களுக்கு இது பெருமையாக இருக்கலாம். ஆனால், அல்லாவுக்கு இது உவப்பான செயல் அல்ல. திருக்குர்ஆனிலே இந்த ஒரு விஷயம் மிக அழுத்தமாகச் சொல்லப்பட்டிருக்கு. உடன்பிறப்புகளோ உறவினர்களோ வறுமைப்பட்டிருந்தால் அவர்களின் கஷ்டத்தைப் போக்க முந்திக் கொள்ளுங்கள் என்கிறது அந்தத் திருவசனம்... நீங்க படித்தவர்... உங்களுக்கு அது தெரியாத விஷயமல்ல...''

''தெரியும்.''

''இன்னொன்றையும் நீங்க யோசித்துப் பார்க்க வேண்டும். பள்ளிவாசலுக்குப் பணம் தர பல பேர் தயாராக இருக்கிறார்கள். ஆனால், உங்கள் தங்கச்சிக்கு உதவி செய்ய உங்களை விட்டால் வேறு யார்?''



''நீங்கள் கொடுத்த ஹதியா பணம் ஐயாயிரத்தை, உடனே உங்கள் தங்கச்சிக்கு அனுப்பி வையுங்கள்.''

வார்த்தைகளுக்குக் கட்டுப்பட்டவன் போல் காதர் ஷெரீபை இணக்கமாகப் பார்த்தான், அப்துல்லா. அவர் தொடர்ந்தார்.

''நீங்க கொடுத்த ஹதியா பணம் ஐயாயிரத்தையும் திருப்பித் தருகிறேன். அதை உடனே உங்க தங்கச்சிக்கு அனுப்பி வையுங்க. அந்த நம்பிக்கையில்தான் உங்க பெயரை நான் வாசிக்கவில்லை. இது உங்களுக்கு சம்மதமென்றால் சரி. இல்லாவிட்டால் சொல்லுங்க. உங்க பெயரை யும் ஜமாத்தார் முன்னிலையில் இப்போதே வாசித்து விடுகிறேன்...'' என முடித்தார், அவர்.

''இல்லை. என் பேரை வாசிக்காதீங்க' தழுதழுத்தான், அப்துல்லா. ○

"நாட்டில் பஞ்சம் வந்தப்ப மன்னர் ஏன் நாட்டை விட்டு ஓடினார்?"

"போர்க்கால நடவடிக்கையாம்!"

- வெ.இளங்கோ





# பக்கத்து வீட்டு

"டாக்டர், உங்களாலதான் என் மாமியார் பிழைச்சுட்டாங்க..."

"புரியலையே எப்படி?"

"நான் பல தடவை ஃபோன் பண்ணியும், நீங்கதான் என் மாமியாருக்கு வைத்தியம் பார்க்க வரமுடியாதுன்னு சொல்லிட்டீங்களே?!"

- வெ.இளங்கோ

"தலைவர் பேசின பொதுக்கூட்டத்துல, அந்த ஆள் மட்டும் கடைசி வரை உட்கார்ந்திருந்தாரா..?"

"ஆமாம்... அவருக்குக் காது சுத்தமா கேட்காதாம்..!"

- வெ.இளங்கோ





"எதிர்க்கட்சிக் கூட்டணியை உடைத்துவிட்டு வந்திருக்கும் தலைவருக்குத் தங்கத்தாலான சுத்தியலைப் பரிசளித்துப் பெருமைப்படுகிறோம்."

- கிரிஜா மணாளன்

# நொறுக்குத் தீனி!

"டாக்டர், என் கணவர் ஒரு சினிமா பார்க்கற மாதிரி இரண்டரை மணி நேரத்துக்குக் கனவு காண்கிறார்!"

"அதனால என்னம்மா?"

"இன்டர்வெல்ல கேன்ட்டீன் போறேன்னு பக்கத்து வீட்ல போய் நொறுக்குத் தீனி சாப்பிட்டுட்டு வந்துடறாரே!"

- சாலப்பாளையம் எஸ்.ஏ.பி. கற்பகம்





"இலங்கைப் பிரச்னையை அரசியல் ஆதாயத்துக்கு யூஸ் பண்ணாதீங்கன்னு தலைவர்கிட்டே சொன்னது தப்பா போச்சு."

"ஏன்?"

"அப்போ அரசியல் ஆதாயத்துக்கு நாங்க எதைத்தான் யூஸ் பண்றதுன்னு புலம்ப ஆரம்பிச்சுட்டார்!"

- சென்னிமலை சி.பி.செந்தில்குமார்





மலேசிய மக்கள் தொகையில் இஸ்லாமியர்களுக்கு அடுத்த இடத்தில் பெரும்பான்மையானவர்களாக இருப்பவர்கள் பௌத்தர்கள்தான். இவர்களில் அதிகமானோர் சீனர்கள். ஸ்ரீலங்கா, தாய்லாந்து, மியான்மார் போன்ற நாடுகளிலிருந்து மலேசியாவில் வந்து குடியேறிய பௌத்தர்களும் உண்டு. மலேசிய பௌத்தர்களுக்குள் பல்வேறு உட்பிரிவுகள் இருந்தபோதிலும், அவர்கள் ஒன்றுபட்டுச் செயல்படுகிறார்கள். குறிப்பாக இளைய தலைமுறையைச் சேர்ந்தவர்கள் தொண்டு நிறுவனங்கள் அமைத்து சமூகப் பணியாற்றுவதுடன், இண்டர்நெட் குழுக்கள் மூலமாகத் தகவல் பறிமாற்றங்களும் செய்துகொள்கிறார்கள். ஞாயிறு அன்று, பௌத்த மடாலயங்களில் நடத்தப்படும் மத போதனை வகுப்புகளில்

சிறுவர்களும், இளைஞர்களும் பெருமளவில் பங்கேற்கிறார்கள்.

நாடெங்கும் வண்ணமயமான பௌத்தக் கோயில்கள் ஏராளம். கென்ட்டிங் மலைப்பகுதியில் அமைந்துள்ள பிரம்மாண்டமான பௌத்த ஆலயத்துக்குச் சென்றோம். சுமார் முப்பது அடி உயரத்துக்கு, நின்ற நிலையில் ஒன்றுமாக, 20 அடி உயரத்துக்கு தியான நிலையில் ஒன்றுமாக இரண்டு புத்தர் சிலைகள். அச்சிலைகளை நான்கு பகுதிகளாகச் செதுக்கி, அவற்றை ஒன்றின் மேல் ஒன்றாகப் பொருத்தி இணைத்திருக்கிறார்கள்.



ஆலயத்தின் சுவர் முழுக்க புத்தர் உருவம் பொறித்த டைல்ஸ். அங்குள்ள விக்ரகங்களுக்கு ஒரு பக்கத்தில் கட்டு கட்டாக ஊதுபத்திகள் வைத்திருக்கிறார்கள். பக்கத்திலேயே விளக்கு எரிகிறது. புத்தர் சிலைக்கு எதிரில் தரையில் ஓர் அடி உயரத்துக்கு ஒரு குஷன் பொருத்தி இருக்கிறார்கள். பௌத்தர்களும் சரி, மற்றவர்களும் சரி கையில் ஏற்றிய ஊதுபத்தியோடு அந்தக் குஷனில் மண்டியிட்டு, கண்மூடி தியானித்து பிரார்த்தனை செய்கிறார்கள். பிரார்த்தனையை முடித்து எழுந்த பிறகு, கரையும் ஊதுபத்திகளைப் போலவே மனத்தின் பாரமும் கரைந்திருக்கின்றது.

மேகம் தவழும் அந்த வளாகத்தின் இயற்கையான எழிலும், அமைதியும் மனசுக்கு அளித்த ஏகாந்தம் வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டது!

# ஓட்டைக் குடம்!

போளூர். ஆர்.பஞ்சவர்ணம்

ஆசிரமத்துக்குத் தினமும் தண்ணீர் எடுப்பது அந்த சீடனின் கடமை. கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்து ஒரு கழியின் இருபுறமும் குடங்களைக் கட்டி எடுத்து வருவான். அதில் ஒரு குடம் பழசாகி விரிசல் விட்டிருந்தது. வழியெல்லாம் தண்ணீர் சிந்தியபடி வர, ஆசிரமத்தை அடையும்போது பாதிக் குடம் தண்ணீர்தான் மிஞ்சும்! நன்றாக இருக்கும் இன்னொரு குடம், தனது வேலையை முழுமையாகச் செய்வதில் பெருமிதம் கொண்டிருந்தது.

இப்படியே பல நாட்கள் கடந்தன. ஒரு நாள் ஓட்டைக் குடம் துணிச்சலை வரவழைத்துக்கொண்டு சீடனிடம் பேசியது. ''என்னை மன்னித்து விடு! எனக்குக் கொடுத்த வேலையை முழுமையாகச் செய்ய முடியவில்லை. பேசாமல் என்னைத் தூக்கி எறிந்துவிட்டு வேறு குடத்தைத் தேடிக் கொள்!''

சீடன் சிரித்தபடி சொன்னான்: ''குறைகளை நினைத்துக் கவலைப்படாதே! ஆசிரமத்துக்குத் திரும்பும் பாதையில் இயற்கையை ரசித்தபடி வா... உனக்கு ஆறுதல் கிடைக்கும்.''

குடம் அவன் சொன்னபடி செய்தது. வழியெல்லாம் அழகிய செடிகள், அதில் வண்ணவண்ணமான மலர்கள் பூத்துக் குலுங்கின. எல்லாவற்றையும் ரசித்த குடம் ஆசிரமம் வந்ததும், தான் சுமந்து வந்த தண்ணீர் பாதியாகி விட்டதை உணர்ந்து அழுதது. சீடன் அதைத் தேற்றியபடி சொன்னான்: ''வழியில் நீ கவனித்தாயா..? எத்தனைவிதமான பூக்கள்! ஆனால், அத்தனையும் பாதையின் ஒரு பக்கத்தில் மட்டுமே இருப்பதைப் பார்த்திருப்பாய். அது உனது பக்கம்தான். இன்னொரு குடம் ஒழுகாது. நீ மட்டும் தான் இப்படி என்பது எனக்கு நன்றாகத் தெரியும். உன்னைச் சுமந்து வரும் வழியில் நிறைய செடிகளை நட்டேன். நீ சிந்தும் தண்ணீரில் அவை வளர்ந்து பலன் தருகின்றன. தினமும் இறைவனை அலங்கரிக்கின்றன. உன்னிடம் அந்தக் குறை இல்லாவிட்டால், இது சாத்தியமாகி இருக்காது. இதை நினைத்துப் பெருமைப்படு'' என்றான். ஓட்டைக் குடத்துக்கு ஒரு தெம்பு வந்தது. ●






# பழங்களின் ராஜா!

**தெ**ன்கிழக்கு ஆசியாவில் விளையும் முக்கிய பழரகங்களில் ஒன்றான துரியன், 'பழங்களின் ராஜா' என்ற பெருமைக்கு உரியது. மலாய் மொழியில் துரி என்றால் முள். ஆகவேதான், பார்ப்பதற்கு பலாப்பழம் மாதிரி வெளிப்புறம் முட்கள் கொண்ட இந்தப் பழத்துக்கு 'துரியன்' என்று பெயர். நன்றாக வளர்ந்த துரியன் பழம் ஒரு அடி நீளம், அரை அடி விட்டத்துக்கும் அதிகமாகக்கூட இருக்கும். சராசரி எடை மூன்று கிலோவாம்.

மலேசியா, இந்தோனேசியா, புருனி... ஆகிய நாடுகளே துரியனின் பிறந்த வீடு. ஆனால் அறுநூறு ஆண்டுகளுக்கு முன்பே இந்தப் பழம் ஐரோப்பியர்களுக்கு அறிமுகமாகி விட்டது. விதைத்த நாலைந்து வருடங்களில் மரமாகி பழங்கள் தர ஆரம்பிக்கும். இந்தப் பழத்தை அப்படியே சாப்பிடுவதுடன், அதைக்கொண்டு என்னென்ன செய்து சாப்பிடலாம் என்று குக்கரி புத்தகங்களில் நிறைய குறிப்புகள் உள்ளன. துரியன் பழக்கொட்டையைக் கூடச் சமைப்பார்கள்.

இன்று மிக அதிகமாக துரியன் பழங்களைப் பயிரிட்டு, ஏற்றுமதி செய்யும் நாடு தாய்லாந்து. ஏற்றுமதி அளவு ஆண்டுக்கு எட்டு லட்சம் டன். ஆண்டுதோறும் மே மாதத்தில் தாய்லாந்தில், 'உலக துரியன் திருவிழா' கொண்டாடுகிறார்கள்.

**கிரிக்கெட் பேட்டும், பந்துமாக வலம்வந்து கொண்டிருந்த இந்திய கிரிக்கெட் அணியின் முன்னாள் வீரர் சடகோபன் ரமேஷ், மேக்-அப்பும், ஸ்கிரிப்ட்டுமாக நடிக்கக் கிளம்பிக் கொண்டிருக்கிறார். கிரிக்கெட் விளையாட்டை மையமாக வைத்து இவர் ஹீரோவாக நடிக்கும் படம் 'பட்டாபட்டி'.**

**ரன்:** 'பட்டாபட்டி' படத்தில் காமெடியில் ரன் எடுக்கப் போறோம்.

**விக்கெட்:** யாருக்கு விக்கெட் வரப் போகுது, யாருக்கு விக்கெட் போகப் போகுதுன்னு படம் வந்ததுக்கு அப்புறந்தான் தெரியும்.

**ஸிக்ஸர் :** காமெடியும், நடிப்பும் மக்களின் மனத்தில் விழுந்தாதான் ஸிக்ஸர். இல்லாட்டி 'டக்'தான்!

**அம்பயர்:** ரசிகர்கள்தான் அம்பயர். அவங்க கையசைப்புக்கு ஏத்த மாதிரிதான் கோடம்பாக்கமே ஆடிக்கிட்டிருக்கு!

**தேர்ட் அம்பயர்:** பத்திரிகைகள்தான்! கலைஞனின் உயர்வுக்கும், தாழ்வுக்கும் பத்திரிகைகள் எழுதும் விமர்சனங்களும் காரணம்.

**ஓபனிங் பேட்ஸ்மேன்:** என் மேல இருக்கற நம்பிக்கையில் என்னை ஓபனிங் பேட்ஸ்மேனா (ஹீரோ) போட்டுருக்காங்க. படத்துக்கு நங்கூரமா இருக்கறது கேப்டன்ஸியைக் காட்டிலும் பெத்த பொறுப்புங்க!

**கேப்டன்:** டைரக்டர் யுவராஜ்தான். முதல் படம்னு சொல்ல முடியாத அளவுக்கு, சீன் மேக்கிங்லேயும் ஸ்கிரிப்ட்லயும் அசத்தியிருக்கார்.

**- ராகவ்குமார்**



பூங்குளம் என்று அந்தக் கிராமத்துக்குப் பொருத்தமாய்த்தான் பெயர் அமைந்திருந்தது. நீர்வளம் நிறைந்த ஊருக்கு உதாரணம் வேண்டுமானால், பூங்குளத்தைத்தான் சொல்ல வேண்டும். ஆடி, ஆவணி மாதத்தில் ஊருக்கு வெளியே சென்று பார்த்தால் குளங்களிலும், ஓடைகளிலும், வாய்க்கால்களிலும், வயல்களிலும் தண்ணீர் நிறைந்து ததும்பி அலைமோதிக் கொண்டிருக்கும். எங்கெங்கும் ஜலமாகவே காணப்படும்.

இந்த ஊருக்கென்று அவ்வளவு புஷ்பங்களும் எங்கிருந்து வந்து சேர்ந்தனவோ தெரியாது; குளத்தைத் தாண்டி அப்பால் போனோமோ இல்லையோ, கொன்றை மரங்களிலிருந்து சரம் சரமாய்த் தொங்கும் பொன்னிறப் புஷ்பங்கள் கண்ணைக் கவர்கின்றன. அந்த மங்களகரமான மஞ்சள் நிறப் பூக்களிடம் சிவபெருமான் அவ்வளவு காதல் கொண்டிருப்பதில் ஆச்சரியம் என்ன? அப்புறம் இந்தப் பக்கம் பார்த்தோமானால், வேலி ஓரத்தில் வளர்ந்திருக்கும் பொன்னரளிச் செடிகளில், பொன்னரளிப் பூக்கள் கொத்துக் கொத்தாய்ப் பூத்திருப்பதைக் காண்கிறோம். அத்தகைய பத்தரை மாற்றுப் பசும் பொன்னின் நிறம் அந்தப் பூவுக்கு எப்படித்தான் ஏற்பட்டதோ என்று அதிசயிக்கிறோம். வேலிக்கு அப்பால் நெடிது வளர்ந்திருக்கும் கல்யாண முருங்கை மரத்தைப் பார்த்தாலோ, அதிலே இரத்தச் சிவப்பு நிறமுள்ள புஷ்பங்கள் குலுங்குவதைக் காண்கிறோம்.

சமீபத்திலுள்ள அந்தச் சிவன் கோயிலைத்தான் பாருங்கள். கோயில் பிராகாரத்தில் மதிலை அடுத்தாற்போல் வளர்ந்திருக்கும் பன்னீர் மரங்களிலே அந்தப் பன்னீர்ப் புஷ்பங்கள் எவ்வளவு அழகாயிருக்கின்றன? பச்சைப் பசேலென்ற இலைகளுக்கு மத்தியில், இந்த வெண்ணிற மலர்கள் எப்படி சோபிக்கின்றன? அடுத்தாற்போலிருக்கும் பவளமல்லி மரத்தையும் அதன் அடியில் புஷ்பப் பாவாடை விரித்தாற்போல் உதிர்ந்து கிடக்கும் பவளமல்லிப் பூக்களையும் பார்த்துவிட்டாலோ ஏன், அப்பால் போவதற்கே நமக்கு மனம் வருவதில்லை.

ஆனாலும் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு அதோ சற்றுத் தூரத்தில் தெரியும் குளக்கரையை நோக்கிச் செல்வோம்.

- 'கள்வனின் காதலி'
நாவலிலிருந்து...

# பூங்குளம்



"என் பெயர் ஸாம்சன். நான் சென்னையில் (முந்தைய பெயர் மெட்ராஸ்) ஆட்டோ ரிக்ஷா டிரைவராக இருக்கிறேன். என்னை நகரின் நடுவிலிருக்கும் தாஜ் கோரமண்டல் ஹோட்டலுக்கு வெளியே பார்க்கலாம்.

நீங்கள் விரும்பும் இடத்துக்கு உங்களை அழைத்துச் செல்லும் மிகப் பாதுகாப்பான டிரைவர் நான். நகரைச் சுற்றிப் பார்க்கவோ, நல்ல உணவு கிடைக்கும் இடத்துக்குப் போகவோ சந்தோஷமாக உதவி செய்வேன். துணிமணியிலிருந்து, வெள்ளி சாமான்கள், பரிசுப் பொருள்கள் வரை என்ன ஷாப்பிங் செய்ய வேண்டுமானாலும் சொல்லுங்கள்... என்னால் சரியான இடத்துக்குக் கூட்டிச் செல்ல முடியும். டுக்-டுக்ல் பயணம் ஜாலியானது மட்டுமில்லை டாக்ஸியைவிட மலிவானதும் கூட! எனது வெப்சைட்டை முழுவதுமாகப் பாருங்கள். சென்னைக்கு வந்தபின் ஸாம்சன் என்று கேளுங்கள்"



# டுக்-டுக் ட்ரிப் போகலாமா?

www.Tuktastic.com என்ற தமது வெப்ஸைட்டின் முதல் பக்கத்தில் Welcome to Chennai என்ற தலைப்பில் இப்படி தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டிருக்கிறார் ஆட்டோ டிரைவர் ஸாம்சன். சென்னை வரும் வெளிநாட்டவர் இவரைத் தேடுகிறார்கள் என்பதைவிட ஆச்சரியமானவை, இவரைப் பற்றிய மற்ற செய்திகள். தாஜ் ஹோட்டலிலிருந்து அடிக்கடி பிரிட்டிஷ் தூதரக அதிகாரிகளை அழைத்துச் சென்றதால் தெரிந்துகொண்ட ஆங்கிலம், அது தந்த தைரியத்தில் வெளிநாட்டவருக்கு ஆட்டோ ஓட்டுவதில் தம்மைத் தயார் செய்துகொண்டிருக்கிறார்.

இங்கிலாந்துக்காரர்கள் மட்டுமில்லை; ஜெர்மனி, ஜப்பான், ரஷ்யா போன்ற பல வெளிநாட்டுக்காரர்களுக்கும் ஆட்டோ ஓட்டியதால் அவர்கள் மொழியையும் புரிந்துகொண்டு அந்த மொழியிலேயே அவர்களுடன் பேசி அசத்துகிறார். ஒரு ஜப்பானியப் பெண்மணிக்கு ஒரு மாதம் ஆட்டோ ஓட்டியபோது, அவரை அடிக்கடி இன்டர்நெட் மையங்களுக்கு அழைத்துப்போயிருக்கிறார். அதன் மூலம் இ-மெயில் பற்றி அறிந்துகொண்டதுடன், அவர் உதவியுடன் தனக்கு ஒரு ஐடி உருவாக்கிக்கொண்டு அதை வெளிநாட்டுப் பயணிகளுக்குக் கொடுக்க, நிறைய மெயில் வர ஆரம்பித்தது. ஆனால், ஒரு சின்ன கஷ்டம். ஸாம்சனுக்கு ஆங்கிலம் படிக்கத் தெரியாது. அதனால் அடிக்கடி இன்டர்நெட் மையங்களில் நண்பர்களின் உதவியுடன் இ-மெயில் படித்துத் தெரிந்துகொள்வார். இப்போது சிறுசிறு வார்த்தைகளில் பதிலும் எழுதுகிறார். பிரிட்டிஷ் ஏர்வேஸ் விமானி கிறிஸ்ட்டியூ சென்னை வரும்போதெல்லாம் இவரது ஆட்டோவைத்தான் பயன்படுத்துகிறார். அவர் தந்த விஸிட்டிங் கார்டிலிருந்த

பிரிட்டிஷ் ஏர்லைன்ஸின் வெப்ஸைட் விலாசத்தைப் பார்த்து, அதற்கும் இ-மெயிலுக்கும் என்ன வித்தியாசம் என்று கேட்க, ஸாம்ஸனின் ஆர்வத்தைப் பாராட்டி, அவர் செலவிலேயே இந்த வெப்ஸைட் துவக்கிக் கொடுத்திருக்கிறார். சைட்டில் இவரைப் பாராட்டி எழுதியு மிருக்கிறார். இந்த வெப்ஸைட் கடந்த இரண்டாண்டுகளில் மிகவும்



பிரபலமாகியிருக்கிறது. தாஜ் ஹோட்டலுக்கு வரும் பல வெளிநாட்டவரின் முதல் கேள்வி, ஸாம்ஸன் எங்கே என்பதுதான்! சென்னை வரும் வெளிநாட்டுப் பயணிகளின் விவரங்களை வெப்ஸைட்டில் அறிந்து, தேவைக்கு ஏற்ப நண்பர்களின் ஆட்டோக்களுக்கும் வாய்ப்பு தந்துகொண்டிருக்கிறார் ஸாம்சன். அதெல்லாம் சரி... அது என்ன பெயர் ட்டுக்டாஸ்டிக்? ''டுக் டுக் என்றால் இங்கிலாந்தில் ஆட்டோ. அதோடு ஃபென்டாஸ்டிக் இணைத்து இந்தப் பெயர்'' என்று சொல்லும் ஸாம்ஸன், தாஜ் ஹோட்டலில் தங்கும் கிரிக்கெட் ஆட்டக்காரர்களிடமும் அறிமுகமானவர். தென்னாப்பிரிக்கா ஆட்டக்காரர் டேல் ஸ்டீவனும் (Dale Steven) ஜேபி டும்மினியும் (JPDuminy) இவரை விசாரித்து இவரது ஆட்டோவில் சென்னையைச் சுற்றிப் பார்த்தவர்கள்.

தமிழக சுற்றுலாத்துறை இவரது ஆர்வத்தைப் பாராட்டி விதிகளைச் சற்றுத் தளர்த்தி, சுற்றுலாப் பயணிகளுக்கு என வடிவமைக்கப்பட்ட விசேஷ ஆட்டோ ஓட்ட அனுமதியளித்து, இந்தியன் ஓவர்ஸீஸ் வங்கி மூலம் கடன் வசதியையும் செய்திருக்கிறது.

**- ரமணன்**

காதில் விழுந்தவை



"அரசு செலவில் ரூ.1500க்கு இலவசத் தொலைக்காட்சி... ஆனால், கோடிக் கணக்கில் மாதந்தோறும் கலைஞர் குடும்பத்துக்கு வருமானம்!"

# பால் கறக்கும் பா.ம.க.!



* வேல்முருகன்

பென்னாகரம் இடைத் தேர்தல், தள்ளிப் போய்க் கொண்டே இருப்பதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் தொகுதியில் களப்பணியில் தீவிரமாய் இருக்கிறது பா.ம.க. வாரம் ஒரு மாவட்டத்திலிருந்து சுமார் ஐந்நூறு தொண்டர்கள் தொகுதிக்குள் வரவழைக்கப்படுகிறார்கள். கிராமத்துக்குப் பத்து பேராக அனுப்பிவிடப்படுகிறார்கள். அவர்களில் இரு பெண்களும் உண்டு. அவர்கள் தொகுதி மக்களோடு மக்களாகப் பழகி அவர்கள் வேலைகளைப் பங்கு போட்டுச் செய்கிறார்கள். மாடு இருந்தால் பால் கறந்து கொடுப்பது, வயல் வேலைகளில் உதவியாக இருப்பது, இளைஞர்கள் இருந்தால் வேலை வாய்ப்புக்கு வழி சொல்வது... என்று குடும்ப அங்கத்தினராகி விடுகிறார்கள். ஒன்றரை லட்சம் வாக்காளர்கள் உள்ள பென்னாகரத்தில் 70 சதவிகிதம் வன்னியர்கள். இவர்களில் நாற்பது சதவிகிதம் பேர் வோட்டுப் போட்டாலே பா.ம.க.வுக்கு வெற்றி.

''தி.மு.க. பணம் கொடுத்தால் வாங்கிக் கொள்ளுங்கள்'' என வன்னிய மக்களிடம் சொல்லி வருகிறதாம் பா.ம.க. ''அதே சமயம் தி.மு.க.வின் ஊழல்களைப் பேசுகிறோம். உதாரணமாக 1500 ரூபாய் அரசு செலவில் இலவசத் தொலைக்காட்சி கொடுத்துவிட்டு, கேபிள் கனெக்ஷன் மூலம் ஒவ்வொரு மாதமும், தமிழகம் முழுதும் கோடிக்கணக்கில் கலைஞர் குடும்பம் எப்படி வசூல் செய்கிறது என்பதை விளக்குகிறோம்'' என்கிறார் பா.ம.க. தேர்தல் பொறுப்பாளரும் சட்டமன்ற உறுப்பினருமான வேல்முருகன்.

மார்ச் ஒன்றாம் தேதி ஸ்டாலின் பிறந்த நாள். அன்று தி.மு.க.வினர் தடபுடல் செய்வார்கள். ஆனால், இந்த முறை இதுபோன்ற நிகழ்ச்சிகளுக்கு விளம்பரம் செய்யும்போது, 'பிறந்த நாள்' என்று போடாமல் 'இளைஞர்கள் எழுச்சி நாள்' என்று போட வேண்டும் என்று தி.மு.க.வினர் அறிவுறுத்தப்பட்டிருக்கிறார்கள். இதுதவிர, ஃப்ளெக்ஸ் பேனர்கள் அதிகம் வைக்கக் கூடாது என்றும் சொல்லப்பட்டிருக்கிறதாம். தேர்தல் நெருங்கி வருவதால் மக்களை எரிச்சல்படுத்தும் அளவுக்கு ஏற்பாடுகள் இருக்கக்கூடாது என்பதைக் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமாம்.

- சஞ்சயன்

# இப்பவும் நான் ராஜா!





# மீண்டும் நம்பியூர்!

- கவிதைகள்
- கதைகள்
- பரிசுப் போட்டி

பாசியில் பேட்டரி!

# கோகுலம்

குழந்தைகளின் குதூகலம்!

மார்ச் 2010 விலை ரூ.8/-

இரண்டாவது முறையும் முத்து லட்சுமியிடமிருந்து அழைப்பு வந்தது. இம்முறை பத்து நிமிடம் கழித்து.

தொலைபேசியை எடுக்கலாமா வேண் டாமா என்ற அலைக்கழிப்பு அவன் இத யத்தை நடுங்க வைத்தது.

ஃபோனை எடுத்தால், 'தேன்மொழி விவகாரம் என்ன ஆச்சு?' என அம்மா கேட்பாள்.

ஏதாவது பொய் சொல்ல வேண்டும்.

ஆனால், சூர்யாவுக்கு, பொய்யை ஒழுங்காகச் சொல்லத் தெரியாது. உதடுகள் உதறும். குரலில் பிசிறுதட்டும். அவை அவன் பொய்சொல்கிறான் என்பதை, கேட்பவர்களுக்குச் சுலபமாகக் காட்டிக் கொடுத்துவிடும். அதற்காகவே அவன் ஃபோனை எடுக்காமல் விட்டுவிட் டான்.

ஆனால், மனசாட்சி அமைதியாக இருக்கவில்லை; உலுக்கி எடுத்தது.

என்னதான் இருந்தாலும் முத்துலட்சுமி தன்னை வயிற்றில் சுமந்தா பெற்றெடுத் தார்? எதற்காக நாம் அவருக்குக் கட்டுப்பட வேண்டும்? சூர்யாவுக்குள் இதுவரை இல்லாத ஒரு புதிய சுயநலமுகம் எட்டிப் பார்த்தது.

*காதல் என்பது ஒரு மாயப் பிசாசு!*
*கெட்டவனை நல்லவனாக்கும்;*
*நல்லனைக் கெட்டவனாக மாற்றும்.*

எங்கோ படித்த வாசகம் சூர்யாவுக் குள் ஸ்லைடு ஷோ போல வந்து போனது.

குழப்பத்துடன் அப்படியே மொட்டை மாடியில் நின்று கொண்டிருந்தவன், சட் டென வாசலில் அழைப்பு மணி கேட்டுப் பதற்றத்துடன் மாடியிலிருந்து கீழே தா



# பகல் மீன்கள்




## அஜயன் பாலா

அறைக்கு வந்தான். இந்த நேரத்தில் யாராக இருக்கும் எனக் கதவைத் திறந் தான்.

அதிர்ச்சி...! அங்கே அவன் முன் முத்துலட்சுமி.

கையில் பிடித்த பையுடன் நின்று கொண்டிருந்தாள். அவளுக்குப் பின்னால் நெற்றி முழுக்க நீறும், ஒல்லியான உடம்பைச் சுற்றிய பட்டுப் புடைவையு மாக இன்னொரு வயதான பாட்டி.

''வாம்மா... என்னம்மா இந்த நேரத்துல...?''

''நம்ம மணிமங்கலத்தார் வீட்டுக் கல்யாணத்துக்கு வந்தோம்பா... இங்கதான் வடபழனியில...''

அம்மா வழக்கமான அவர்களது பதற்றமில்லாத வாஞ்சையுடன் நுழைந்த படி...

''என்னப்பா உனக்கு எத்தனை தடவை ஃபோன் போட்டேன்... எடுக்கவே இல்லை''

''அப்படியாம்மா...?'' சூர்யாவுக்கு வார்த்தைகள் உதறின.

''சைலன்ட்ல போட்டிருந்தேம்மா...'' சட்டென ஒரு பதில் கூறித் தப்பித் தான்.

''இடம் தெரியாம ஆட்டோவுல பக்கத்துத் தெருவெல்லாம் சுத்திட்டோம். உன் ஃபோன் வேற எடுக்கலையா.... அப்புறம் எதிர்க்க இருக்க மளிகைக் கடையை அடையாளம் வெச்சுக் கண்டு பிடிச்சேன்.''

சூர்யா, முத்துலட்சுமியின் கையிலிருந்த பையை வாங்கி, அறைக்குள் வைத்தான்.

முத்துலட்சுமி, ''யார் தெரியுதா?'' மகனிடம் பாட்டியைப் பார்த்து கை நீட்டினாள்.

''தெரியலையேம்மா...''

''நம்ம வீட்டுக்குப் பின்னால காரை வீடு இருக்குதுல்ல... செவப்பா ஒரு பொண்ணுகூட பால் ஊத்த அடிக்கடி நம்ம வீட்டுக்கு வந்து போவுமேப்பா... அவங்க மாமியார்.''

சூர்யாவும் தனக்கு ஞாபகத்துக்கு வந்தாற்போல் ஒப்புக்குத் தலையசைத் தவன், இருவரையும் வரவேற்கும் விதமாக நாற்காலிகளைச் சரிப்படுத்தினான்.

''ஏன்ம்மா இந்த நேரத்துல... முன் னாடியே ஃபோன் போட்டிருந்தா, நான் பஸ் ஸ்டாண்ட்ல வந்து கூட்டிட்டு வந்துருப்பேன் இல்ல.''

பாட்டியை நாற்காலியில் உட்காரச் சொல்லிவிட்டு, முத்துலட்சுமி அப்படியே கிராமத்து வீட்டில் உட்காருவது போல தரையில் கால்நீட்டி அமர்ந்தாள். மகன் கொடுத்த தண்ணீர் நிரம்பிய கண்ணாடிக் குவளையைக் கையில் வாங்கியபடி, மடக் மடக்கெனக் குடித்தவள், அதனை ஒரு கிளாசில் ஊற்றி பாட்டியிடம் நீட்டினாள். முந்தானையால் உதட்டு ஈரத்தைத் துடைத்தபடி,

''நான் வந்த கையோட ஊருக்குப் போவலாம்னுதான் நெனைச்சேன்... அத னாலதான் உனக்குக் கூட ஃபோன் போடலை.''

''தோ இந்தக் கிழவிக்கு இந்த வயசுல எம்.ஜி.ஆர். சமாதி பார்க்கணுமாம். அதான் காலையில் கல்யாணத்தையும் பார்த்துட்டு அப்படியே எம்.ஜி.ஆர். சமாதி காண்பிச் சுட்டு ஊருக்குப் போகலாம்னு நெனைச் சோம். அங்க பார்த்தா மண்டபத்துல கூட்டம் படுக்க இடமில்லை. அதான் கிழவியை இழுத்துக்கிட்டு வந்துட் டேன்.

சரி நீ வேற அந்தப் பொண்ணைப் பார்த்தேன்னு சொன்னே இல்ல... அதையும் அப்படியே கேட்டுட்டுப் போக லாம்னுதான்...''

சட்டென கண்களை முந்தானையால் துடைத்துக்கொண்டாள்.

சூர்யாவுக்குள் தேன்மொழியின் வாசனை வந்துபோனது. தன் தோளைத் தழுவி காதோரம் அவள் ஐ லவ் யூ சொல் வதாக உணர்ந்தான்.

''அடுத்த மாசம் சேகருக்கு முதல் தெவசம் வரப்போகுதுப்பா... அதுக்குள்ள அவளை நான் பார்க்கணும்பா... நாளைக் குப் பார்க்க முடியுமாப்பா? என்னைக் கூட்டிக்கிட்டுப் போறியா?''

முத்துலட்சுமி, இப்படி அடுத்தடுத்து குண்டுகளை இறக்க, சூர்யாவுக்கு என்ன



பேசுவதென்றே தெரியவில்லை.

''முதல்ல சாப்பிட்டீங்களா? இல்லை எதுனா வாங்கிட்டு வரட்டுமா? பக்கத் துலதான் சரவணபவன். ஆப்பம் வாங் கிட்டு வரட்டுமாம்மா?''

''வேணாம்ப்பா... கல்யாண வூட்லயே ரெண்டு பேரும் சாப்பிட்டுட்டுதான் கிளம் பினோம்.''

''சரிம்மா... இப்ப படுங்க.''

''இல்லைப்பா என் மனசு அரிக்குது. நான் அவளைப் பாக்கணும். எம் புள்ளைய எதுக்குடி கொன்னேன்னு நாக்கைப் புடுங் கிக்கிறா மாதிரி கேக்கணும்...'' முத்து லட்சுமியின் உடல் நடுங்கியது.

சூழலே சட்டென இறுக்கமாகியது.

''ம்ம் இல்லைம்மா அவ... அவ... வந்து இப்ப ஊர்ல இல்லைம்மா... வெளியூருக்குப் போயிருக்கா''- சூர்யா சமாளித்தான்.

''அவ என்னப்பா அவ்ளோ அழகா...?''

இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வதெனத் தெரியவில்லை. சூர்யா உள்ளுக்குள் அழுதான்.

''ஆமாம்மா அவ உண்மையிலே அழகு தான்ம்மா.''



''அப்படின்னா அவ திமிர்பிடிச்சவளாதான் இருக்கணும். பணத் திமிர்... அதான் எம்புள்ளையை மயக்கிட்டு அப்புறம் இன்னொரு பணக்காரனைப் பார்த்ததும் வேணாம்னு சொல்லியிருக்கா.''

தன் மனசுக்குள் தேவதையாக வலம் வரும் தேன்மொழியை அம்மா இப்படி பேசுவதை சூர்யாவால் தாங்க முடியவில்லை.

''நீ பேசினியாப்பா... சேகரை எதுக்குக் கல்யாணம் பண்ணிக்கமாட்டேன்னு சொன்னான்னு கேட்டியாப்பா?''

''இல்லையேம்மா.''

''வேணாம்... வேணாம்.. அவகிட்ட நீ எதுவும் பேசிக்காதே... இப்பவே பேசிட்டா, அப்புறம் நான் அவளைப் பார்க்கவே முடியாமப் போயிடும்...'' என்றவள், முந்தானையை அவிழ்த்துக் காண்பித்தாள். அதில் குங்குமம் இருந்தது.

''பச்சையம்மாவுக்குப் படையல் போடறேன்னு வேண்டிக்கிட்டுதான் கிளம்பினேன்''

சிறிது நேரம் சூர்யா அம்மாவை மவுனமாகப் பார்த்தான்.

''அம்மா தூங்குங்க... அடுத்த மாசம் நானே உங்களுக்கு ஃபோன் பண்றேன். அப்ப வந்தாபோதும்... எங்க போயிடுவா?''

சூர்யாவுக்கு இதைச் சொல்லும்போது, மனசில் கசப்பு தட்டியது. அவர்களுக்குப் படுக்க பாய், பெட்ஷீட், தலையணைகளைக் கொண்டு வந்து கொடுத்தான்.

அம்மா படுத்ததும் லைட்டை அணைத்துவிட்டு, தன் அறைக்குள் வந்தான். கைபேசியை எடுத்துப் பார்த்தான்.

தேன்மொழி மறுநாள் அப்பாவுடன் அவள் பிறந்த ஊருக்குச் செல்வதாகவும், மறுநாள் காலை சில முக்கியமான விஷயங்கள் பேசவிருப்பதாகவும் மெசேஜ் அனுப்பியிருந்தாள்.

இவன் ''ஓ.கே.'' என்று மட்டும் பதில் அனுப்பி வைத்தான். 'பின் தாமதமாகப் பதில் அனுப்புவதற்கு மன்னிக்கவும். இக்கட்டான தருணம்' என்றும் இன்னொரு பதிலை அனுப்பினான்.

'என்ன முக்கியமான விஷயம் என்று கேட்டிருந்தால், நான் இன்னும் கொஞ்சம் மகிழ்ந்திருப்பேன்' - தேன்மொழி.

'சரி இப்போது மகிழலாம்... என்ன அந்த அதிமுக்கியம்?' - சூர்யா

'அது இணைந்த இதயங்களை அங்கீகரிக்கும் திருமணம் தொடர்பாக அப்பா அடுத்த மாதத்தில் முடிக்கலாம் என அவசரப்படுகிறார். அப்பாவே இது விஷயமாக

உங்களிடம் பேசுவார். குட் நைட்... பேட் ட்ரீம்ஸ்' - ஸ்மைலி போட்டு முடித்திருந்தாள் தேன்மொழி.

சூர்யாவுக்கு இது அதிர்ச்சியாக இருந்தது. என்ன பதில் அனுப்பலாம் என யோசித்தான். தேன்மொழியுடன் திருமணம்... கற்பனை செய்தபோது மகிழ்ச்சியாக இருந்தது.

தனக்கென ஒரு மனைவி, குடும்பம்!

'நானும் இந்த உலகில் மனிதனாகப் போகிறேன்'- மனசு கூவியது.

அருணாசலத்துக்கு மனசில் மகிழ்ச்சி அலைஅலையாகத் ததும்பியது. எத்தனையோ முறை தமது பண்ணைக்கு வந்திருந்தாலும் இம்முறை மகளோடு வந்திருந்தது மனசுக்குள் மகிழ்ச்சியை வாரி இறைத்திருந்தது. திருமணத்துக்கு முன் கிராமத்தில் அவர் குலதெய்வமான கருமாரியம்மனுக்கு அமாவாசையன்று பொங்கல் வைக்கும்படி யாரோ சொன்னதைக் கேட்டு வந்திருந்தார்.



**'கதைகளில் வரும் தேவதைதான் தன் மகள்' என அகமகிழ்ந்தார் அருணாசலம்**

கிராமமே மாறியிருந்தது. அருணாசலத்தின் அக்கா மற்றும் தம்பியின் குடும்பத்தினரும் அவர்களது மருமகள்களும், குழந்தைகளும், தேன்மொழியைச் சுற்றி வளைத்துக்கொண்டனர். அவர்கள் தேன்மொழியைச் சின்ன வயதில் பார்த்தது. தொடர்ந்து கல்லூரி, படிப்பு என அலைந்ததில் தேன்மொழிக்கும் கிராமத்துக்கு வந்து இவர்களைச் சந்திப்பதில் நேரம் இல்லாது போயிருந்தது. அந்த இடைவெளி இந்த வருகையில் முழுவதுமாகக் காணாமல் போயிருந்தது. கிராமத்துப் பெண்ணாகவே மாறி தன் மகள் அவர்களோடு பழகுவதை எண்ணி அருணாசலத்துக்குப் பூரிப்பு தாளவில்லை. கதைகளில் வாசிக்கும் தேவதைதான் தன் மகள் என நினைத்து அகமகிழ்ந்தார். அவர்களுடன் கோயிலுக்குச் சென்று காரியங்களை முடித்துவிட்டு, அங்கேயே மதியம் வரை இருந்து விட்டு அப்பாவும் மகளும் புறப்பட்டனர். மாப்பிள்ளை சொந்தமில்லை என்பதில் அவர்களுக்கு அதிருப்தி என்றாலும், யாரும் அதை வெளிக்காட்டவில்லை. புறப்படும்போது மகிழ்ச்சியுடன் கை அசைத்தனர்.

கடலூர் சிதம்பரம் சாலையில் இருந்த அக்கிராமத்திலிருந்து இரண்டு கிலோமீட்டர் தூரம்தான் இருவரும் வந்திருப்பர்.

அதற்குள் காரில் ஏதோ பிரச்னை. மக்கர் பண்ணத் தொடங்கியது.

எது நடக்கக் கூடாதோ அது நடந்தது...

வண்டி பாதியில் நின்றது.

மாலை நான்கு மணி. இப்போது புறப்பட்டால்தான் ஒன்பது மணிக்காவது சென்னையில் இருக்கும் வீட்டுக்குப் போக முடியும்.

டிரைவர் மெக்கானிக்கை அழைத்துவர, கடலூர் பஸ்ஸை வழிமறித்து ஏறிக் கொண்டார்.

அந்த மாலை நேரமும் அந்த கிராமமும் தேன்மொழியின் வாழ்க்கைக்குள் ஒரு புதிரைக் கிளப்ப இருப்பதை அறியாமல், அருணாசலம் மகளோடு அந்த காரில் தனித்து அமர்ந்திருந்தார்.

**(மீன்கள் துள்ளும்...)**






• கிராபியென் ப்ளாக்

# தோல்வியின் நிறம்!

நகரத்துக்குப் பிழைப்பு தேடிவந்து தோல்வியின் விளிம்பில் முகம் தொலைத்த மனிதர்களின் மன உலகின் வெளிப்பாட்டைத் தம் ஓவியங்களில் பதிவுசெய்திருக்கும் கிராபியென் ப்ளாக், ஓவியக் கல்லூரியில் சேர்ந்து முறைப்படி பாடம் பயின்றவர் அல்ல.

ஆயினும், ஓவியர்களுடனான நட்பில் கிடைத்த அனுபவங்களைக் கொண்டு வரைய முற்பட்டிருக்கிறார்.

இவரின் கலை, இலக்கியச் செயல்பாட்டுக்கு த.மு.எ.க.ச. தோழர்களும், நண்பர்களுமே வடிவம் கொடுத்தவர்கள்.

திரைத்துறையில் இயக்குநர் மிஷ்கினிடம் இரண்டு வருடங்கள் உதவி இயக்குநராகப் பணியாற்றியவர், தற்போது ஒரு சினிமா பத்திரிகையில் உதவி ஆசிரியராகவும், நிருபராகவும் இருக்கிறார்.

– கமலி






விவாதம்

# "என்ன கொடுமைங்க

பூங்கொடி என்ற பெண் தற்கொலை செய்து கொண்ட வழக்கில், தற்கொலைக்குத் தூண்டியதாகவும், கொடுமைப்படுத்தியதாகவும் குற்றம் சாட்டப்பட்டு அவரது கணவர் ரவிச்சந்திரனுக்கு எட்டு ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை வழங்கியது மகளிர் நீதிமன்றம். இப்போது ரவிச்சந்திரன் மேல்முறையீடு செய்ததில், உயர்நீதி மன்றம் அவரது தண்டனையை ரத்து செய்துவிட்டது. தீர்ப்பை வழங்கும்போது நீதிபதி அருணா ஜெகதீசன் ❒ குடிப் பழக்கத்தால் ஏற்படும் சிறு சண்டைகள், தற்கொலைக்குத் தூண்டும் நடவடிக்கை ஆகாது. ❒ குடித்துவிட்டு கணவன் தினமும் தாமதமாக வருவது, மனைவியைக் கொடுமை செய்வது ஆகாது. ❒ குடும்பப் பிரச்னையின் காரணமாக கணவரும் அவரது உறவினர்களும் பெண்களைத் திட்டுவது சாதாரண விஷயம். ❒ சாதாரண பிரச்னைகளை எதிர்கொள்ள முடியாமல் அந்தப் பெண் தற்கொலை செய்து கொண்டுள்ளார்' என்று கூறியிருக்கிறார்.

மீடியாவில் வெளி வந்துள்ள இந்தத் தீர்ப்பின் சுருக்கம் சமூகத்தில் எதிர்மறையான கருத்தைப் பரப்பி, பெண்களை மேலும் கொடுமைக்கு ஆளாக்கும் வாய்ப்பு அதிகம் என்று படபடக்கின்றனர் பெண் உரிமை ஆர்வலர்கள். சிலரிடம் நாம் பேசினோம்...

''இந்த வழக்கின் முழுவிவரம் தெரியவில்லை என்றாலும், மீடியா தீர்ப்பின் சுருக்கத்தைப் படித்த பிறகு சில கருத்துகளைச் சொல்ல முடியும்'' என்கிறார் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் குழு உறுப்பினரும், ஜனநாயக மாதர் சங்கத்தின் முன்னணிப் போராளியுமான வாசுகி.

''ஒரு நபரைத் தற்கொலைக்குத் தூண்ட, பெரிய காரணம் வேண்டும் என்பது கிடையாது. நபருக்கு நபர் இது வேறுபடும். எது சிறியது, எது பெரிது என்பதை ஒற்றைப் பார்வையோடு வரையறுக்க முடியாது. மனரீதியான உளைச்சல், அடி உதை போல் பெரிய விஷயமில்லை என்ற கருத்து தெரிவிக்கப்பட்டிருந்தால் குற்றவியல் சட்டம் 498-A (கொடுமைப்படுத்துதல்) வந்திருக்காது. கணவன் செய்யும் இம்சைகள் சிறிய விஷயம் என்ற கருத்தோட்டம் சமுதாயத்தில் இருந்திருந்தால் குடும்ப வன்முறைச் சட்டம் வந்திருக்காது. நமது அரசியல் சட்டம் சமநிலைக் கோட்பாட்டை வலியுறுத்தியிருக்கவே முடியாது.

ஆணாதிக்கப் பார்வையில் மனைவி என்பவள் ஆணின் சொத்து. எனவே 'சிறியது' என்று சொல்லி பெரிய அளவிலேயே துன்புறுத்தலாம்- இதுதான் பாகுபாடான இந்தச் சமூகத்தின் நியதி. இதை உறுதிப்படுத்துவது போல இந்தத் தீர்ப்பு இருந்துவிடக் கூடாது'' என்றார் வாசுகி.

❋ உ. வாசுகி



"கிரிமினல் வழக்குகளில் ஒவ்வொரு தீர்ப்பும் சந்தேகத்துக்கு அப்பாற்பட்ட சாட்சியங்களின் நிருபணங்களின் அடிப்படையிலேயே அமைகிறது. எனவே, இந்தத் தீர்ப்பை அந்த வழக்குக்கு உரியதாகப் பார்க்க வேண்டுமே தவிர, மொத்தமாகப் பொருத்திப் பார்க்கக் கூடாது'' என்கிறார் வழக்கறிஞரும், தமிழக பா.ஜ.க.வின் மாநிலச் செயலாளருமான வானதி சீனிவாசன். "இந்தக் குறிப்பிட்ட வழக்கின் விசாரணையின்போது தற்கொலை செய்து

# இது!?"



* வானதி ஸ்ரீனிவாசன்

கொண்ட பூங்கொடியின் உணர்வுகள், மனநிலை, உட்கிரகிக்கும் தன்மை ஆகியவை நன்றாகவே அலசப்பட்டிருக்கும். ஆனால், சொல்லப்பட்ட குற்றச்சாட்டுகள் தற்கொலைக்குத் தூண்டும் அளவுக்கு இருந்தன என்பதை நூறு சதவிகிதம் நிருபிக்கும் அளவுக்கு சாட்சியங்கள் இல்லாமல் இருந்திருக்கக்கூடும். இத

"இந்தத் தீர்ப்பை அந்த வழக்குக்கு உரியதாக மட்டுமே பார்க்க வேண்டும்-மொத்தமாகப் பொருத்திப் பார்க்கக் கூடாது!"

னாலேயே சந்தேகத்தின் பலன் (Benefit of doubt) குற்றவாளி ரவிச்சந்திரனுக்கு சாதகமாக அமைந்துவிட்டது!

மீடியா இந்த வழக்கின் தீர்ப்பைப் பற்றி செய்தி வெளியிடும்போது, இன்னமும் கொஞ்சம் தெளிவோடு, பரபரப்பைப் பின்னுக்குத் தள்ளி வெளியிட்டிருந்தால், தவறான செய்தி சமூகத்துக்குப் போகாமல் தடுக்கப்பட்டிருக்கும். 'கணவன் குடித்து விட்டுத் தாமதமாக வருவது கொடுமை செய்வது ஆகாது' என்று உச்சநீதிமன்றத்தில் சொல்லப்பட்ட ஒரு தீர்ப்பை மேற்கோள் காட்டியிருக்கிறார் உயர்நீதிமன்ற நீதிபதி.

மீடியா எவையுமே தீர்ப்பின் முழு விவரத்தையும் வெளியிடுவதில்லை. சுருக்கமாக வெளியிடுகின்றன. ஒரு நீதிபதி கருத்தைச் சொல்லும்போது, குறிப்பிட்ட வழக்கின் தீர்ப்புக்கு எந்த விதத்தில் அந்தக் கருத்து உதவியாக இருக்கிறது என்பதையும் விளக்கியிருப்பார். அந்த விளக்கத்தையும் சேர்த்து அறியும்போதுதான் தீர்ப்பின் பின்னால் உள்ள நியதியைப் புரிந்துகொள்ள முடியும். ஆனால் மீடியா அந்த விளக்கத்தை வெளியிடவில்லை!

இந்த வழக்கில் குற்றவியல் சட்டம் 498A (கொடுமைப்படுத்துதல்) என்பது சட்டப் பிரிவு 306ன் (தற்கொலைக்குத் தூண்டுதல்) கீழ் தண்டனைக்குட்படுத்தும் வகையில் **சாட்சியங்கள் வைக்கப்படவில்லை** என்பதுதான் சரியாக இருக்கும். ஆனால் மீடியா முழுமையாக வெளியிடாததால் இந்தத் தீர்ப்பு பெண்களை ஆண்கள் கொடுமை செய்ய அனுமதி கொடுக்கும்வகையில் அமைந்துவிட்டது என்று எடுத்துக் கொள்ளக் கூடாது.

* சுதா ராமலிங்கம்



**"திருமணத்துக்கு முன்பு ஆண்-பெண் இருவருக்கும் வாழ்க்கை குறித்த கவுன்செலிங் தேவை!"**

"நீதிமன்றம், சட்டம் மற்றும் சாட்சியங்கள் அடிப்படையில்தான் தீர்ப்பு வழங்கும். இந்த வழக்கின் தீர்ப்பின்போது சொல்லப்பட்ட சில கருத்துகள் பெண்களைக் கொடுமைப்படுத்துவது குறித்து சர்ச்சைக்குரிய சில கேள்விகளை எழுப்புவதால் அரசு உச்சநீதிமன்றத்துக்கோ அல்லது உயர் நீதிமன்ற பெஞ்சுக்கோ அப்பீல் செய்யலாம்'' என்கிறார் வழக்கறிஞர் சுதா ராமலிங்கம்.

''சொல்லப் பட்ட கருத்துகள் இந்த வழக்குக்கு மட்டுமே பொருந்தும். அதைப் பொதுவாகப் பார்த்து ஆண்கள் பெண்களை மேலும் கொடுமைப்படுத்த உரிமம் அளித்ததுபோல் எடுத்துக்கொள்ளக்கூடாது.

திருமணத்துக்கு முன்னேயே நமது பெண்கள் மற்றும் ஆண்களுக்கு வாழ்க்கை குறித்த கவுன்செலிங் தேவை. குடும்ப வன்முறைச் சட்டம்கூட கிரிமினல் நடைமுறைப்படி உருவாக்கப்படவில்லை. குடும்ப அமைப்பு காப்பாற்றப்பட வேண்டிய ஒன்று என்பதே நீதிமன்றங்களின் நோக்கமாக இருக்கிறது '' என்கிறார் சுதா ராமலிங்கம்.

**- ப்ரியன்**

● எதையும் பெஸ்டா செலக்ட் பண்ணும் ஒருத்தன் 'காதலி' விஷயத்தில் என்ன பண்ணுகிறான் என்பதுதான் கதை.

● ப்ளே பாயா... இல்லை 'பெஸ்ட்' விரும்பியா என குழப்பத்தோடே நகர்கிற விஷாலின் கேரக்டர், குழப்பத்துக்கு விடை தராமலேயே முடிந்துபோகிறது.

● ஹீரோயிஸம் காட்டாத, பஞ்ச் டயலாக் அடிக்காத அவரின் புத்திசாலித்தனம், ஜொள்ளு விடுகிறேன் என்று அசட்டுச் சிரிப்பு சிரிப்பதில் அஷ்டகோணலாகிறது.

● தமிழுக்குக் கிடைத்த அழகான ஹீரோயின் சாராஜென், அவரையும் க்ளைமாக்ஸ் காட்சியில் லோ நெக் சுடிதார் போட வெச்சுக் கலாய்ச்சுட்டீங்க. திருந்துங்க பாஸ்.

● ஆடை பாதி... ஆள் பாதின்னு பதை பதைக்க வைக்கற நீதுசந்திரா. கோடீஸ்வரி கேரக்டரில் ஏகப் பொருத்தம். அரையும் குறையும் ஆட்டம் போடறதை இத்தோட நிறுத்திக்கங்க. இல்ல உங்களுக்கு 'ஏ' முத்திரை விழுந்துடும்னு சொல்ல வெக்கறாங்க.

● பிரகாஷ்ராஜ் எம்மாம் பெரிய நடிகன். அவருக்குத் தம்மாத்துண்டு கேரக்டரைக் கொடுத்து காவுவாங்கிட்டார் டைரக்டர்.

● டியூன் போடணுமேன்னு ஏனோ தானோன்னு போட்டுக் கொடுத்திருக்கிறார் யுவன். ஒண்ணு கூட விளங்கலை.

● சந்தானம் அண்ட் கோவின் காமெடி டாப் கியரில் எகிறுவதுதான் ஒரே ஆனந்தம்.

● முதல் பாதியில் ஜாலியா நகரும் திரைக்கதை, மறுபாதியில் க்ளாமருக்குத் தாவி பஞ்சராவது அந்தோ பரிதாபம்.

● அரவிந்த்கிருஷ்ணாவின் கேமரா ஃபாரின் டூர் கூட்டிட்டுப் போய் ட்ரீட் வைக்கிறது!

● ஏதேதோ நிர்பந்தத்துல 'இயக்குநர் திரு' என்னென்னமோ பண்ணியிருக்கார்.

தீராத விளையாட்டுப் பிள்ளை - பார்க்கலாம்.

- திலீபன்



இந்திய டெஸ்ட் கிரிக்கெட் மெல்ல மெல்ல அடுத்த கட்டத்தை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது. டெஸ்ட் கிரிக்கெட்டின் உச்சமான முதல் இடத்தை அடைந்து விட்ட இந்திய அணிக்கு, சமீபத்தில் ஏற்பட்ட நெருக்கடியால் அடுத்த தலைமுறை ஆட்டக்காரர்களைத் தயார்ப்படுத்துகிற அவசர வேலை வந்திருக்கிறது.

திராவிட், லக்ஷ்மண் இருவருக்கும் சமீபத்தில் காயம் ஏற்பட்டபோது, இந்திய அணியின் குறைகள் அப்பட்டமாக வெளியே தெரிய ஆரம்பித்தன. மாற்று ஏற்பாடாக அணிக்குள் நுழைந்த தமிழக வீரர்களான பத்ரிநாத், முரளி விஜய் இருவரும் கிடைத்த வாய்ப்புகளை முழுதாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. கடந்த சில ஆண்டுகளில் ரஞ்சிப் போட்டிகளில் சுப்ரமணியம் பத்ரிநாத் சாதித்ததைப் போல வேறு யாரும் சாதிக்கவில்லை. ஆனால், அவரால் சர்வதேசப் போட்டிகளில் அந்தளவுக்கு ஆளுமையுடன் ஆடமுடியவில்லை. ஸ்டெயினின் ஒவ்வொரு பந்துக்கும், அவர் பதில் சொல்லக் கடுமையாகப் போராட வேண்டியிருந்தது. முரளி விஜய்க்கும் இதே நிலைமைதான்.

இந்தியப் பந்துவீச்சாளர்களுக்கும் சர்வதேச பௌலர்களுக்கும் நிறைய வேறுபாடுகள் இருக்கின்றன. வேகம், துல்லியம், சூட்சுமம், பொறுமை... போன்ற குணாதிசயங்கள் கொண்ட பந்து வீச்சாளர்களை, இந்திய முதல்தரப் போட்டிகளில் அரிதாகவே காணமுடியும். இவர்களிடம் ஆடிப் பழகியதால்தான்,

# அதிரடியான

# அடுத்த கட்டம்!

ச.ந. கண்ணன்

இந்திய அணிக்குள் நுழையும் புதிய வீரர்கள் தடுமாற்றத்துக்கு ஆளாகிறார்கள். ஆனாலும் விஜய், பத்ரி, கோலி, மனிஷ் பாண்டே... என்று அடுத்த தலைமுறை வீரர்கள் சவாலுக்குத் தயாராகவே இருக்கிறார்கள். வாய்ப்புகள் அளிக்கப்படுவதில்தான் அவர்கள் திறமையை முழுதாகக் கொண்டுவர முடியும்.

**ப**ந்து வீச்சில் புதிய வீரர்களைக் கொண்டுவர தேர்வுக் குழுவும் தோனியும் மிகவும் தயங்குவது ஒருகட்டத்தில் ஆபத்தில் சென்றுமுடியும். சுதிப் தியாகியை பெஞ்சில் உட்கார வைத்தே வெறுப்பேற்றி விட்டார்கள். ஜாகீர், இஷாந்த், ஸ்ரீசாந்த் ஆகிய மூன்று பேரைத் தவிர, புதியவர்களைக் களம் இறக்குவது கிடையாது. ஆனால், ஆஸ்திரேலியாவில் கடந்த இரண்டு வருடங்களில், நான்கு புதிய பௌலர்கள் இடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளார்கள். அதனால் ப்ரெட்லீக்கு டெஸ்ட் போட்டியில் இடமில்லை என்று அறிவித்துவிட்டார்கள். அந்த நிலை இங்கு வருமா? ஸ்பின்னர்களிலும் அஸ்வினைத் தவிர, பெரிய நம்பிக்கை நட்சத்திரங்கள் யாரும் இல்லை.

**அ**டுத்த நான்கு வருடங்கள் கழித்து இந்திய டெஸ்ட் அணியில் சச்சின் திராவிட், லக்ஷ்மண் ஆகிய மூன்று பேரும் தென்படமாட்டார்கள். இந்த நிலையில் முற்றிலும் ஒரு புதிய அணிக்கு இந்திய அணி தயாராக வேண்டும். தேர்வுக்குழுவும் தோனியும் வட்டத்தைத் தாண்டி யோசிக்கப் பழக வேண்டும்.









# மலாய் பேச

அமைச்சர் டத்தோ சரவணனுடனான தொகுதி ரவுண்ட்-அப்பின்போது அடிக்கடி நம் காதில் விழுந்த ஒரு வார்த்தை, 'மசால்'. இவர்கள் என்ன சொல்கிறார்கள்? மசால் தோசையா? மசால் வடையா? அப்புறம்தான் தெரிய வந்தது. மசால் என்றால் மலாய் மொழியில் பிரச்னை. இந்த வார்த்தைக்கு மூலம் சமஸ்கிருதம். அதேபோல அதிகம் பயன்படுத்தப்பட்ட இன்னொரு வார்த்தை 'வனித'. இதற்கு பெண்கள் என்று அர்த்தம். மலாய் மொழிக்கும் சமஸ்கிருதத்துக்கும் ஏதோ விட்ட குறை தொட்ட குறை.

மலேசியாவின் அதிகாரபூர்வ ஆட்சி மொழியான மலாய், மலேசியாவில் மட்டுமல்ல, புருனி, இந்தோனேசியா, சிங்கப்பூர், பிலிப்பைன்ஸ், தாய்லாந்து... ஆகிய நாடுகளிலும் கணிசமான மக்களால் பேசப்படுகிறது.

**சுமத்ராவில் 7ம் நூற்றாண்டில் தோன்றியதுதான் மலாய் மொழி!**

இந்தோனேசியாவின் முக்கிய மொழியான இந்தோனேசிய மொழி மலாயிலிருந்து வந்ததுதான். மலேசியாவில் மட்டுமின்றி, புரூனி நாட்டிலும் மலாய் ஆட்சி மொழி. மலேசியாவில் மலாய் மொழியை, 'பாஷா மலேசியா' என்று குறிப்பிடுகிறார்கள். சிங்கப்பூரின் தேசிய மொழிகளுள் மலாயும் ஒன்று.

ஆஸ்திரோ ஆசிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மலாய் மொழி, ஏழாம் நூற்றாண்டில் சுமத்திரா நாட்டில் தோன்றியதற்கு எழுத்துபூர்வமான ஆதாரம் இருக்கிறதாம். அந்தக் காலத்தில் பேசப்பட்ட மலாய் மொழியில் சமஸ்கிருத ஆதிக்கம் அதிகமாக இருந்ததாம். காலப்போக்கில் முஸ்லிம் ஆட்சியாளர்களின் காலத்தில் மலாய் மொழியுடன் அராபிக், பாரசீக மொழிகளும் கலந்து பல்வேறு மாற்றங்களுக்கு உள்ளாகி, ஆதி மலாய் மொழியுடன் ஏறத்தாழ தொடர்பே இல்லாத அளவுக்குக் கலப்பாகிவிட்டது. அதிகாரபூர்வமாகவும் சரி, வழக்கத்திலும் சரி, லத்தீன் எழுத்துகளே மலாய் மொழிக்குப் பயன்படுத்தப்படுகின்றன.

## அழகிரிசாமியின் 'இலக்கிய வட்டம்!'

**1950**களின் மத்தியில் தமிழ்நாட்டு எழுத்தாளரான கு.அழகிரிசாமி மலேசியாவின் தமிழ்நேசன் நாளிதழுக்கு ஆசிரியர் பொறுப்பேற்றுக்கொண்டார். படைப்பிலக்கியத்தை ஊக்குவிப்பதை லட்சியமாகக்கொண்டு செயல்பட்ட அவரை மையமாகக்கொண்டு, கோலாலம்பூரில் ஓர் இலக்கிய வட்டம் உருவானது. மாதம் ஒருமுறை கூடிய இந்த இலக்கிய வட்டத்தின் கூட்டங்களில், உள்ளூரிலிருந்து மட்டுமில்லாமல் கிள்ளான், செரம்பான், செலாங்க்கூர்... போன்ற மற்ற ஊர்களிலிருந்து கூட இலக்கிய அன்பர்கள் கலந்துகொண்டார்கள். அந்தக் கூட்டங்களில் முதல்முறையாக சிறுகதைகளின் கரு, நடை, உத்தி... போன்றவை விரிவாக அலசப்பட்டு, கருத்துப் பரிமாற்றங்கள் நடந்தன. அந்த இலக்கிய வட்டத்தில் வாசிக்கப்பட்ட சிறந்த கதைகளை கு.அழகிரிசாமி, தமிழ்நேசன் பத்திரிகையில் வெளியிட்டார். 1957ல் அவர் தமிழ்நாடு திரும்பியதை அடுத்து, இலக்கிய வட்டம் முடிவுக்கு வந்தது.



❋ கு.அழகிரிசாமி

இன்று மலாய் மொழியில் தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம், அராபிக், பாரசீகம், போர்ச்சுகீஸ், டச்சு மொழி வார்த்தைகள் பலவும் நுழைந்துவிட்டன.

எழுபதுகளில் வெளியான ரஜினி - ஸ்ரீதேவி நடித்த 'பிரியா' படத்தின் 'என் உயிர் நீதானே!' பாடலின் தொடக்கத்தில் இடம்பெறும் வரிகள் மலாய் மொழிதான்! ○

# வாரீகளா..?!

# நட்சத்திர நெடுங்கதை 5

நே ற்றுவரை படுஉற்சாகமாயிருந்த நீலவேணி, இன்றைக்குக் காலையில் படுக்கையிலிருந்து எழுந்த போது சுதி இறங்கிப் போயிருந்தாள்.

''என்னங்க, இன்னிக்கு நா ஒங்ககூட வர முடியாது போலயிருக்கே'' என்றாள் முத்துராமலிங்கத்திடம்.

''தலை விண் விண்ணுங்குது. அப்படியே கண்ணை மூடிக்கிட்டுப் படுத்துக் கெடக்கணும்போல இருக்கு.''

''ஐயோ வேணி, இன்னிக்கு விழாவுக்கு நீ வந்தா எவ்ளோ நல்லாயிருக்கும்'' என்று ஆதங்கப்பட்டான் முத்து.

''உங்க ஒய்ஃபையும் கூட்டிட்டு வந்துருங்க ஸார்னு விழா அமைப்பாளர்கள் திரும்பத் திரும்பச் சொன்னாங்க.''

''உங்களுக்காக நடத்தப்படற பாராட்டு விழாவுல கலந்துக்கணும். உங்களைப் பத்தி மத்தவங்க பேசறதைக் காதாரக் கேக்கணும்னு எனக்கு மட்டும் ஆசையாயில்லியாங்க?''

''சரிம்மா. நீ படுத்திரு. இந்த விழா இன்னிக்கு இல்லன்னா நா ஒம்பக்கத்துல ஒக்காந்து தலையைப் புடிச்சு விடுவேன்.''

''ஐயே. தலையப் புடிச்சு விடுவாராம்ல. கௌம்புங்க நீங்க. இன்னிக்கு எவ்ளோ விசேஷமான நாள் ஒங்களுக்கு! என்னைப் பத்தின கவலையை விடுங்க. ஆமா, டிஃபன் உங்களுக்கு?'' இந்த இடத்தில் ஓர் இடைவெளி விட்டு, வேணி கணவனின் முகத்தை ஆராய்ந்தாள். பிறகு,

''என்ன அப்படிப் பாக்கறீங்க?'' என்றாள்.

''நா எங்க உன்னப் பாத்தேன். நா பாக்கவே இல்லியே'' என்று நழுவப் பார்த்த முத்துவை இவள் விடவில்லை.

''பொய் சொல்லாதீங்க. நீங்க பாத்தீங்க. என்னமோ டெய்லி காலைல இவ நமக்கு டிஃபன் செஞ்சு தர்ற மாதிரிதான்னுதானே பாக்கறீங்க?''

''ஐயையோ. நா அப்படி நெனைக்கவே இல்லம்மா. நீ என்ன செய்வ வேணி... நா சம்பாதிக்கக் கொட்டாத்தான் நீ வடிச்சிக் கொட்டுவ. உன் தலையெழுத்து என்னைக் கட்டிக்கிட்டு நீயும் பட்டினி கெடக்கணும்னு உனக்கு விதிச்சிருக்கு பார்.''

''என் தலையெழுத்துக்கு என்னங்க. அது நல்லாத்தான் இருக்கு. என்ஜினீயர் மாப்ள, டாக்டர் மாப்ள எல்லாம் மார்க்கெட்ல கெடச்சுருவாங்க. ஆனா ஒரு எழுத்தாளர் மாப்ள கெடக்கிறது லேசுப்பட்ட விஷயமா! உங்க பாராட்டு விழா பத்தின நியூஸ் எல்லாம் பேப்பர்ல வரும், டீவியில



வரும்... அப்புறம் நாம எங்கேயோ போயிரப் போறோம். அப்புறம் என்ன, டெய்லி காலைல டிஃபன்தான், மூணு வேளை மூக்கு முட்டச் சாப்பாடுதான்... ஆமாங்க, பண முடிப்பு குடுப்பாங்க இல்ல?''

''பண முடிப்பு குடுப்பாங்க, குடுப் பாங்க, குடுப்பாங்க. போதுமா?''

''போதுங்க. தீபாவளி சமயத்துல இந்த மாதிரி ஒரு விழா அமைஞ்சு போச்சு பாருங்க. இந்த வருஷம் தீபாவளி நமக்கு ஜாலிதான்!''

''மூணு மாசத்துக்குச் சாப்பாட்டுச் செல வுக்கும் வீட்டு வாடகைக்கும் கவலை யில்லன்னு நா நெனைச்சிட்டிருக்கேன். நீ

**ஏ.ஏ.ஹெச்.கே. கோரி**



தீபாவளி கொண் டாடப் போயிட் டியே வேணி!''

''எல்லாம் சரி யாப் போகுங்க. நீங்க கவலையே படாதீங்க. ஆமா, மீட்டிங்ல உங்களை யும் பேசச் சொல்வாங்களா?''

''ஐயா பேசாமலா!''

''அப்ப, பட்டினியாப் போகாதீங்க. வழி யில ஹோட்டல்ல டிஃபன் பண்ணிட்டுத் தெம்பாப் போங்க.''

''வழியிலயா? அழைப்பிதழை நீ சரியாப் பாக்கலியா? 9.30க்கு சிற்றுண் டின்னு போட்டிருக்காங்களே? நாஷ்டா முடிஞ்சுதான் பத்து மணிக்கு மீட்டிங். ஆமா உனக்கு?''

''எனக்கு எதுக்குங்க? பசியில்ல. நா மாத்திரையப் போட்டுட்டுப் படுத்திருக் கேன்.''

''வெறும் வயித்துல மாத்திரை போடக் கூடாது. நா போய் உனக்கு இட்லி வாங் கிட்டு வர்றேன்.''

**ஒ**ரு இட்லி ஆறு ரூபாய். அஞ்சு இட்லிக்கு முப்பது ரூபாய் அவுட். மிச்சம் பத்தே பத்து ரூபாய் தான் பாக்கெட்டில் கிடந்தது.

# போகவிருந்தவர்கள்!

இதில் அஞ்சு ரூபாய் பஸ்ஸுக்குத் தர வேண்டுமா?

வேண்டாம்.

நடந்தான்.

வேகமாய் நடந்தான்.

திரும்பி வருகிறபோது பஸ்ஸில் வந்து விடலாம், பண முடிப்போடு.

இத்தனை வருஷ வறுமைக்கு இன்றோடு ஒரு முடிவு வர வேண்டும், விடிவு காலம் பிறக்க வேண்டும் என்று விதியிருந்தால் அதை யாரால் மாற்ற முடியும்!

**க**டந்த காலத்தை அசைபோட்டபடியே நடந்தான். முத்துராமலிங்கம் என்கிற முழுப் பெயரில் கதையெழுதி, முதல் கதைக்கு முன்னூறு ரூபாய் சன்மானம் வாங்கிப் புளங்காகிதமடைந்தவன் இவன். இதே ரீதியில் போனால், மூணு நாளைக்கொரு கதை. மாசத்துக்குப் பத்து கதை. பத்து இன்ட்டு முன்னூறு... ஹ, மூவாயிரம். அப்புறம் அப்படியே கோடம்பாக்கம் பக்கம் போய் சினிமாவுக்குப் பாட்டெழுத முயற்சித்தால் ஓஹோவென்று வந்து விடலாம்.

ஒரு பாட்டுக்கு மினிமம் வேஜஸ் ஐயாயிரம் ரூபாயாமே? மாசத்துக்கு நாலே நாலு பாட்டு எழுதினால்கூட இருபதாயிரம்! இன்றைக்கு ஐ.டிக்காரர்கள் வாங்கிக் கொண்டிருக்கிற சம்பளம்!

**நீ**லவேணியின் பெயரிலிருந்து நீலத்தைப் பிரித்தெடுத்து அதோடு வானத்தை ஒட்டி, நீலவானன் என்று புனைபெயர் வைத்துக்கொண்டு எழுதித் தள்ள ஆரம்பித்தான். இவன் எழுதித் தள்ளிய கதைகளெல்லாம் இவனுடைய கெட்ட நேரத்துக்குத் தள்ளுபடியாகிவிட்டன.

சன்மானம் தந்து கொண்டிருந்த பெரும்பாலான ஜனரஞ்சகப் பத்திரிகைகளெல்லாம் பத்திரிகையை விற்பதற்கு சினிமா விஷயங்கள் மட்டுமே போதும் என்று சிறுகதைகள் பிரசுரிப்பதையே நிறுத்தி விட்டன. இலக்கியப் பத்திரிகைகளில் கதைகள் வந்தன. காசு வரவில்லை.

கோடம்பாக்கத்துக்குப் போய் எட்டிப் பார்த்தான். 'கல்யாணந்தா கட்டிக்கிட்டு ஓடிப் போலாமா, ஓடிப் போயிக் கல்யாணந்தா கட்டிக்கலாமா' போன்ற கருத்துள்ள பாடல்களெல்லாம் எழுத இவனுக்குக் கை வராததால், சினிமாவுக்குள் பிரவேசிக்காமலேயே புறமுதுகிட வேண்டியதாப் போச்சு.

இரண்டு பதிப்பாளர்களைப் பிடித்து, சிறுகதைத் தொகுப்புகள் இரண்டு வெளி



யான சாதனை மட்டும் நிகழ்ந்தது. ராயல்ட்டி வரவில்லை.

பரவாயில்லை. அந்த இரண்டு சிறுகதைத் தொகுப்புகளை முன்னிலைப் படுத்தித்தான் இவனுக்காக இன்றைக்கு இந்தப் பாராட்டு விழா.

**உ**ற்சாகத்தில் வாக்கிங் வேகமாய் வந்தது. ஆனாலும் எழும்பூரை அடைகிற

போது மணி ஒன்பது ஐம்பது ஆகி விட்டது.

அமைப்பாளர்களில் ஒருவர் இவனுக்காக ஹாலின் வாசலிலேயே நின்றிருந்தார்.

''என்ன நீலவானன் சார், லேட் பண்ணிட்டீங்க. வாங்க வாங்க'' என்று இவனை வழிநடத்திச் சென்றார் மேடையை நோக்கி.

''உங்களை கான்டாக்ட் பண்ணலாம்னா, உங்க செல் நம்பர் என்கிட்ட இல்ல.''

செல் இருந்தால்தானே நம்பர் இருக்கும்?

தகவல் தொழில்நுட்பம் உச்சத்திலிருக்கிற இந்த இருபத்தொன்றாம் நூற்றாண்டில், செல்ஃபோன்கூட இல்லாத ஒரு பரிதாபத்துக்குரிய பாமரனாய்த் தன்னை அடையாளம் காட்டிக்கொள்ளப் பிரியப்படாமல் சிரித்து மழுப்பினான், நீலவானன் என்கிற முத்துராமலிங்கம். ஆச்சு. இன்னும் சிலவே சிலமணி நேரம்தான்! பண முடிப்பைப் பெற்றுக்கொண்டு வீட்டுக்குப் போகிற வழியிலேயே செல்ஃபோன் ஒன்றை வாங்கி பாக்கெட்டில் வைத்துக் கொண்டுதான் போக வேண்டும்.

''எம்.எல்.ஏ வந்துக்கிட்டிருக்காராம். நல்லவேளை, இன்னும் வரல. வந்திருந்தா மனுஷன் அவசரப்படுத்துவார். அவரைக் காக்க வைக்க முடியாது'' என்று இவனை முன் வரிசையில் உட்கார்த்தி வைத்த அமைப்பாளர், ''நீலவானன், நீங்க டிஃபன் சாப்ட்டீங்களா?'' என்று ஒரு சம்பிரதாயக் கேள்வியைக் கேட்டு வைத்தார்.

'இல்லை' என்று சொல்வதா அல்லது 'வீட்டிலேயே சாப்ட்டு வந்துட்டேன்' என்று ஒரு பொய்யைச் சொல்லி, ஒரு படைப்பாளியின் சுய கவுரவத்தைத் தூக்கிப் பிடிப்பதா? - எம்.எல்.ஏ வருகிற நெருக்கடியில் இவன் 'இல்லை' என்று சொன்னாலும் இவனுக்குச் சிற்றுண்டி பரிமாறப்படுமா என்று குழம்பிக் கொண்டிருந்தபோது, ''எம்.எல்.ஏ வந்தாச்சு. எம்.எல்.ஏ வந்தாச்சு'' என்று குரல்கள் எழ, இவனுடைய பசி பம்மிக் கொண்டது.

இவனை அறிமுகப்படுத்திப் பேசிய அமைப்பாளர், ''தற்காலத் தமிழ் இலக்கியத்தில், தலைசிறந்த சிறுகதை எழுத்தாளர்களைப் பட்டியல் போட்டால் அதில் முதல் பத்துப் பெயர்களுக்குள் இவருடைய பெயரும் இருக்கும்'' என்று புகழ்ந்து தள்ளியபோது, இதைக் கேட்டு சந்தோஷப்படுவதற்கு இங்கே நீலவேணி இல்லையே என்றிருந்தது.

எம்.எல்.ஏவுக்கு அமைப்பாளர் பொன்னாடை போர்த்த, எம்.எல்.ஏ இவனுக்குப் போர்த்தினார். பிறகு சொற்பொழிவாற்றிய எம்.எல்.ஏ பொன்னாடை போர்த்தலைப் பற்றியும் தன்னுடைய பேச்சில் நகைச்சுவையாய்க் குறிப்பிட்டார்.

''...இதைப் பொன்னாடையென்று மரியாதையாய்ச் சொல்வார்கள். சால்வை என்று சாதாரணமாயும் சொல்வார்கள். எப்படிச் சொன்னாலும் சரக்கு ஒன்றுதான். இந்த சால்வைகள் எல்லாமே ரொடேஷனில் வருபவை. என்னைப் போன்ற முதல் நிலை அரசியல்வாதிகளுக்கு மாசத்துக்கு பத்து சால்வைகள் தேறும். வருஷத்துக்கு நூற்றிருபது. இதையெல்லாம் அடுக்கி வைப்பதற்கு வீட்டில் அலமாரிகள்

**'' 'தேடாதே கிடைக்காது'ன்னு உங்க படத்துக்கு டைட்டில் வைச்சிருக்கீங்களே. எதைப் பற்றி சொல்ல வந்தீங்க?''**

**''வேறென்ன... கதையைத்தான்!''**

**- ஜி.வி.சுபாஷ்**

போதாது. ஆனால் செகண்ட் ஹாண்ட் சால்வைகளைக் கொள்முதல் செய்வதற் கென்றே சில ஜவுளிக்கடைகள் இருக்கின் றன. இந்தச் சால்வைகளைப் பாதி விலைக்கு விற்றே ஆயிரக்கணக்கில் சம்பா திக்கிற எதிர்க்கட்சி நண்பர்களை எனக்குத் தெரியும். நீங்கள் சிரிப்பதற்காக நான் இதைச் சொல்லவில்லை. நீங்கள் சிந்திக்க வேண்டும். ஏனென்றால் பொருளாதார நெருக்கடி இருக்கிற இந்தக் காலத்தில் நாம் சிக்கனமாக இருக்க வேண்டியது மிக மிக அவசியம்.''

அரங்கத்தில் யாரும் சிரிக்கவுமில்லை. சிந்திக்கவுமில்லை.

இருந்தாலும் சளைக்காமல் தொடர்ந்தார் எம்.எல்.ஏ.

''இந்த சால்வை முன்னூறு ரூபாய் பெறும். எப்படி இவ்வளவு துல்லியமாகச் சொல்கிறேன் என்றால், வகை வகையாய், ரகம் ரகமாய் சால்வைகள் பார்த்தவன் நான். எனக்கும் இந்த எழுத்தாளருக்கும் ஒரே மாதிரி முன்னூறு ரூபாய் சால்வையைப் போட்டிருக்கிறார்கள். இந்த எழுத்தாளரு டைய கதைகள் ஒன்றும் என்னுடைய பார்வைக்கு வராவிட்டாலும், எனக்குப் போட்ட அதே சால்வையை அவருக்கும் போட்டிருப்பதால், அவரும் எனக்கு இணையான ஓர் அறிவாளி என்று இந்த அமைப்பாளர்கள் முடிவு செய்திருப்பதை நான் சிரம் தாழ்த்தி ஏற்றுக்கொள்கிறேன். இது எழுத்தாளரின் விழா... ஆகையால் எழுத்தாளருக்கும் எனக்கும் ஒரே மாதிரி சால்வை போர்த்தி, சமத்துவ நிலையை நிலைநாட்டியது நியாயம்தான். அதில் எனக்கு வருத்தமொன்றுமில்லை. முன் னாள் அமைச்சரான என்னை, அப்படிக் குறிப்பிடாமல் வெறும் எம்.எல்.ஏ என்று அழைப்பிதழில் குறிப்பிட்டிருப்பதைக் குறித்தும்கூட எனக்கு வருத்தமில்லை. ஆனால், இந்த எழுத்தாளருடைய மன நிலையை நினைத்துப் பாருங்கள். நீல வாணன் என்கிற அவருடைய அழகான பெயரில் மூன்று சுழி 'ண'வுக்குப் பதிலாக இரண்டு சுழி 'ன' போட்டு, அழைப்பித ழில் நீலவானன் என்று தவறாக அச்சடித் திருப்பதைப் பார்க்கையில் அவருடைய மனம் எவ்வளவு வேதனைப்படும் என் பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது.''

இந்தக் கட்டத்தில் எழுந்து முன்னாள் அமைச்சரின் தவறைச் சுட்டிக்காட்டலாம் என்று முயன்ற நீலவானனை, பக்கத்தி லிருந்த அமைப்பாளர் அமுக்கிப் பிடித்தார்.

''விடுங்க. நீளவாணன்னு சொல்லாம நீலவாணனோட நிறுத்திக்கிட்டாரேன்னு



சந்தோஷப்படுங்க.''

எம்.எல்.ஏ.- கம் முன்னாள் அமைச்சர் சொற்பெருக்காற்றி முடித்துவிட்டு, ஒரு பூப்புனித நீராட்டு விழாவின் தலைமை தாங்கப் போக வேண்டும் என்று புறப் பட்டுப் போய்விட்டார். போய் விட்டாரே மனுஷன், அவர் கையால்தானே பண முடிப்பு வழங்க ஏற்பாடு பண்ணியிருப் பார்கள்?

என்ன அவசரமோ, போய் விட்டார். இவனுக்குப் பணமுடிப்பை அமைப்பாளர் களே தருகிறார்களாயிருக்கும்.

மாஜி மந்திரி போன பின்னால், பார்வையாளர் வரிசையிலிருந்த மூத்த எழுத்தாளர் ஒருவர் பேச அழைக்கப்பட்டார். பேசி முடித்துவிட்டு அவர், மேடையில் காலியாய்க் கிடந்த மாஜி மந்திரியின் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டதும், நீலவானன் ஏற்புரை நிகழ்த்துவார் என்று அறிவிக்கப்பட்டது.

ஏற்புரையா? பண முடிப்பைப் பெற்றுக் கொண்ட பிறகல்லவா அதை நிகழ்த்த வேண்டும்? அதற்கு முன்பே ஏற்புரையென்றால், பணமுடிப்பு கிடையாதா?

இந்த முன்னூறு ரூபாய் சால்வைக்கா ஒரு ஏற்புரை!

நம்பிக்கையிழந்த நிலையில், இயந்திரம் மாதிரி ஏற்புரை நிகழ்த்திவிட்டு வந்து உட்கார்ந்தான். முழுசாய் நம்பிக்கையிழப்பதற்கு, அமைப்பாளர்களில் ஒருவருக்கும், மூத்த எழுத்தாளருக்குமிடையே நிகழ்ந்த உரையாடலை உன்னிப்பாய் ஒட்டுக் கேட்க வேண்டியிருந்தது.

''என்ன ஸார் நீலவானனுக்குப் பண முடிப்பு ஒண்ணும் குடுக்கலியா?''

''அதுக்குதானே சார் ஒரு இருபத்தஞ்சாயிரம் ஏற்பாடு பண்ணி வச்சிருந்தோம். கால் லட்சம்! கடைசி நேரத்துல இந்த எம்.எல்.ஏ பத்தாயிரம் குடுத்தாத்தான் மீட்டிங்குக்கு வருவேன்னு ஸ்ட்ரைக் பண்ணிட்டார். ஒரு மாதிரி பேரம் பேசி எட்டாயிரம்னு முடிச்சோம். இந்த ஹாலையும் டிஃபனையும் ஸ்பான்ஸர் செய்ய ஒத்துக்கிட்டிருந்த ஜவுளிக்கடை மொதலாளியோட பேர் இன்விடேஷன்ல சின்னதாப் போச்சு. அதனால கோவிச்சுக்கிட்டு அந்த ஆள் பணம் தர முடியாதுன்னுட்டார். ஆக, நீலவானனுக்காக வைச்சிருந்த இருபத்தஞ்சாயிரத்துக்கு மேல கையிலயிருந்து ஒரு மூவாயிரம் செலவாயிருச்சு. பாவம் இந்த ஆள், பண முடிப்பு இவருக்குக் கைநழுவிப் போயிருச்சு. நல்லவேளை இவருக்கு விஷயம் தெரியாது.''

“ கடைசி நேரத்துல இந்த எம்.எல்.ஏ பத்தாயிரம் குடுத்தாத்தான் மீட்டிங்குக்கு வருவேன்னு ஸ்ட்ரைக் பண்ணிட்டார். ஒரு மாதிரி பேரம் பேசி எட்டாயிரம்னு முடிச்சோம். ”

ஏன் தெரியாது? இப்ப தெரிஞ்சு போச்சு! இருபத்தஞ்சாயிரம்! அந்த எம்.எல்.ஏவோட மாசச் சம்பளத்துல பாதி! தெரியாமலேயே போயிருந்தா நெஞ்சு இவ்வளவு கனக்காது. நீலவானனுக்கு நெஞ்சின் பாரம் ஒருபுறம் அழுத்த, பசி வேறு வயிற்றைக் கிள்ளியது. காலைச் சிற்றுண்டி மிச்சம் மீதி இருந்தால், வந்ததுக்கு அதையாவது தின்றுவிட்டுப் போகலாம் என்று பார்த்தால், சிற்றுண்டி பரிமாறப்பட்ட இடம் படு சுத்தமாயிருந்தது. சால்வையை மடித்துக் கக்கத்தில் வைத்துக்கொண்டு, ''அப்ப நா கௌம்பட்டுமா சார்?'' என்று அமைப்பாளர்களை நோக்கிக் கரங்குவித்தான்.

''எப்படிப் போறீங்க?'' என்று கேட்கப்பட்டதற்கு, ''ம்? ஆட்டோ, இல்லாட்டி பஸ்'' என்று பதில் சொல்லிக் கொண்டிருந்தபோது, மாஜி மந்திரி கம் எம்.எல்.ஏ உட்கார்ந்திருந்த நாற்காலியின் கைப் பகுதியில் இவனுடைய பார்வை பதிந்தது.

அவசரத்தில் அந்த ஆள் அவருடைய சால்வையை மறந்துவிட்டுப் போயிருந்தார்.

அமைப்பாளரைப் பார்த்து, ''சார் நா ஒரு விஷயம் கேட்டா தப்பா எடுத்துக்க மாட்டீங்களே?'' என்றான் தணிந்த குரலில்.

''கேளுங்க நீலவானன்'' என்று அவர் தைரியமளிக்கவும் இவன் கேட்டான்:

''அந்தச் சால்வையையும் நா எடுத்துக்கவா சார்...?'' ●




**கெ**ன்டிங் - நம் குலு மணாலியைப் போலவே மலேசியாவின் குளுகுளு மலைப்பிர தேசம். அந்த ஏரியாவையே பொழுதுபோக்கு கேளிக்கைக்காக, ஒரு சீன அம்பானிக்கு நீண்டகாலக் குத்தகைக்குத் தாரைவார்த்துக் கொடுத்துவிட்டார்கள். அமெரிக்காவின் லாஸ்வேகாஸ் போல, மலேசியாவுக்கு கென்டிங் ஹைலேண்ட்தான் சூதாட்ட மையம்!

சூதாட்ட வளாகததுககுள்ளே போக ஏகக் கெடுபிடிகள். காலர் இல்லாத பனியன் அணிந்துகொண்டு போனால் வெளியே தள்ளிவிடுவார்கள். காலில் ஷூ அணிந் திருக்க வேண்டும். இஸ்லாமிய மதத்தினர் சூதாடக் கூடாது. 18 வயதுக்குக் குறைவான வர்கள் சூதாட மட்டுமில்லை, மற்றவர்கள் சூதாடுவதை வேடிக்கைகூடப் பார்க்க முடி யாது. இத்தனையையும் தாண்டி உள்ளே போகிறபோது மெட்டல் டிடெக்டரில் பரி சோதனை. கத்தி, கைத் துப்பாக்கி வைத்திருந்தால் போலீஸில் பிடித்துக் கொடுத்து விடுவார்கள். இதை எல்லாம் தாண்டினால், ஒரு வீடியோ கேமராவை உங்கள் முகத்துக்கு முன் நீட்டி, க்ளிக். உங்கள் ஃபோட்டோ அங்கே பதிவாகிவிடும்.

உள்ளே கடகடவென்று தாயக் கட்டை உருட்டுவது போலச் சத்தமிடுகின்றன. ஏராளமான வீடியோ கேம் மெஷின்கள். பணம் செலுத்தி, அதற்குரிய கார்டை வாங்கி மெஷினில் நுழைக்க வேண்டும். பாஸ்வேர்டை அழுத்தின மறுவினாடி, அந்த மிஷின் உங்களுடன் விளையாடத் தயாராகி விடும். நாம் அங்கே நின்று வேடிக்கை பார்த்த அரை மணி நேரத்தில், ஆடியவர் களின் பேலன்ஸ் குறைந்துகொண்டே போனது.

கேஷ் எக்ஸ்பிரஸ், ஏசியன் பிரின்ஸ், சில்க் ரூட், ஜாக்பாட் கார்னிவல், இல்யூஷ னிஸ்ட், கிளிட்டர் அண்டு கோல்டு... என்று

# வை ராஜா வை!

விதம்விதமான பெயர்களில் மனசைக் கலைத்து, பணம் பறிக்கின்றன எமகாதக மிஷின்கள். அவற்றின் முன்னால் கண் கொட்டாமல் அமர்ந்து ஆடிக்கொண்டிருந்தவர்களுள் அதிகம் பேர் சைனாக்காரர்கள்.

இன்னொரு தளத்தில் நிறைய மேஜைகள், ஒவ்வொன்றிலும் அழகான ஒரு சைனாப் பெண்ணும், பையனும். எதிரே நாற்காலிகளில் ஆடத் தயாராக ஆட்கள். விதம்விதமான சீட்டுக் கச்சேரிகள் ஒவ்வொரு டேபிளிலும் கனஜோராக நடந்து கொண்டிருந்தன. இன்னொரு பக்கம் சுழலும் தட்டு. மற்றொரு பக்கம் சிதறி ஓடி நிற்கும் டைஸ். சீட்டுகளைக் கலைத்துப் போட ஒரு மிஷின்.

மேஜையின் எதிரில் அமர்ந்திருக்கும் அத்தனை பேரும் ரிங்கட்டும், டாலரும் கொடுத்து மாற்றிக்கொண்ட, பிளாஸ்டிக் டோக்கன்களை அடுக்கி வைத்துக்கொண்டு, பெட் கட்டி, டென்ஷனுடன் உட்கார்ந்து சூதாடுகின்றனர். பார்க்க நமக்கென்னவோ ரொம்ப வேடிக்கையாகத்தான் இருந்தது. அவர்கள் டென்ஷன் அவர்களுக்கு! தப்பித் தவறி ஜெயித்தவன், குஷியில் சூதாட்டத்தைத் தொடர்கிறான் என்றால், தோற்றவன், விட்டதை எப்படியாவது எடுத்துவிட வேண்டும் என்று நாற்காலியை விட்டு எழுந்திருக்காமல் தொடர்ந்து ஆடுகிறான். மொத்தத்தில் இவர்கள் அத்தனை பேரும் கண்ணெதிரே காசை இழந்துகொண்டிருக்க, எங்கோ உட்கார்ந்து கொண்டு அந்த கேசினோவை நடத்தும் சீனப் பெரும்புள்ளி, கோடிகோடியாக ஜெயித்துக் கொண்டிருக்கிறான்.

"கோடிகோடியாக இங்கே பணத்தை இழந்துவிட்டு, தற்கொலை செய்துகொண்ட சூதாட்டப் பித்தர்கள் பற்றி அவ்வப்போது நியூஸ் வரும்!" என்ற மலேசியத் தமிழ் நண்பர் மனோ, "நம்ம ஊர்ல கூட கேசினோ வரப் போகுதாமே!" என்று கேட்டார். "ஐயோ! குடியைக் கெடுக்க இருக்கிற டாஸ்மாக் ஒன்று போதாதா?" என்றோம் நாம். •

# கவலைப்படும் கலை!

"ஹலோ... யாரு ரிஷியா? அம்மாவைக் கொஞ்சம் கூப்பிடுறா செல்லம்..."

"அம்மா இப்ப வர மாட்டா... கவலைப்பட்டிண்டிருக்கா..."

'என்னது கவலைப்படறாளா? என்ன ஆகியிருக்கும்? ஹய்யோ உடனே போய்ப் பார்த்தாகணும்' என நினைத்தவாறே கவிதா பறந்தாள்.

"ப்ரியா உனக்கென்னடா கவலை? எங்கிட்டே சொல்லக் கூடாதா..? இப்படி இளைச்சுட்டியே..."

"என்னது இளைச்சுட்டேனா? ஹை... இத இத இதத்தானே எதிர் பார்த்தேன்... கவலைப்பட்டதுக்குக் கைமேல பலன், சும்மாயில்லடி... வொர்ரி க்ளாஸ் அட்டெண்ட் பண்றேனாக்கும்."

"வாட்? வொர்ரி க்ளாஸா?"

"எப்படியெல்லாம் கவலைப் படுறதுன்னு சொல்லித் தர்ற க்ளாஸ்."

"அதெப்படி டெய்லி கவலைப் பட முடியும்?"

"பேக்கு... கவலைப்பட விஷயமாயில்லை? மாமியார் கல்லுகுண் டாட்டமா இன்னும் வளைய வராளே, நம்ம புள்ள மட்டும் ஏன் இப்படி மக்காயிருக்கு, சொத்துப் பாகப்பிரிவினை வைபோகம் எப்போ நடக்கும்... போன்ற ஏகப்பட்ட ஏரியா இருக்கே கவலைப்பட..."

"இதனால என்ன பலன்?"

"என்ன பலனா? இந்த வொர்ரி தெரபியினால மார்னிங் வாக், ஏரோபிக்ஸ், யோகான்னு சகலத்தையும் டெலீட் பண்ணியாச்சு. பயமோ பயம்... அப்பப்ப கொஞ்சம் கவலைப்பட்டா போதும். உடம்பு சிக்குன்னு ஆயிடும்."

"வொர்ரி தெரபி... ரொம்பப் புதுசாயிருக்குடி ப்ரியா.

"கவலை என்ன புதுசா? இப்ப புராணங்களையே எடுத்துக்கோ... ராமருக்கு எத்தனை கவலை? மான், மனைவி, ராவணன், சமுத்திரம்னு அடுக்கடுக்கா அவருக்குக் கவலை... ஆனாலும் அவருடைய அழகை வர்ணிக்காத கவிஞன் உண்டா? ஃபிகர் மெயின்டெய்ன் ஆனது கவலையினால(!)தான். நெக்ஸ்ட் கிருஷ்ணரை எடுத்துக்கோ... அவருடைய வொர்ரி ஏரியா ஈஸ் வெரி வாஸ்ட்... யாராத்து வெண்ணையை அபேஸ் பண்ணலாம், ஒவரா வழியற கோபிகைகளிடமிருந்து எப்படி தப்பிக்கலாம்? பதினாறாயிரம் மனைவி இருக்கறவருக்குக் கவலை இருக்காதா? அவருடைய



ப்யூட்டி + ஃப்ளூட்டுக்கு மயங்காத மாடு மனுஷா உண்டா? எல்லோருக்கு எதிரேயும் சிரிச்சுண்டு நைஸா தனியா போய் கவலைப்பட்டிருக்கிறார். அப்புறம் இந்த சிவன்...''

''சரி, சரி புரிஞ்சுடுத்து, அவர் தானும் கவலைப்பட்டு சிவ தாண்டவமாடி, மத்த தேவாதி தேவர்களுக்கும் 'இப்ப எதுக்குக் கோபம்னு தெரியல்லையே'ன்னு இன்ஸ்டன்ட் கவலையும் கொடுத்திருக்கார்... திருப்தியா? ஆனா பயமாயிருக்குடி...''

''என்ன பயம்? இப்ப அமெரிக்க ஜனாதிபதி ஒபாமாவைப் பாரு... எப்படி ஸ்மார்ட்டா ஸ்லிம்மா வளைய வர்றார்... என்ன காரணம்? கவலைதான்... நைஸா புழக்கடையில பாம் வைச்சுட்டுப் போயிடுவானோ, நம்மைவிட இந்தியா பவர்ஃபுல் ஆயிடுமோ... பாகிஸ்தானிலிருந்து புதுசா தீவிரவாதி யாரேனும் தனக்கு பாடிகார்டா வந்துடுவானோ...ன்னு ஏக கவலை... இப்ப பால் தாக்கரே பாரு... மகாராஷ்ட்ரா, மராத்தி என்று சதா கவலைப்படறாரு... எப்படி இந்த வயசுலேயும் படு ஸ்மார்ட்டா இருக்கார்! எல்லாம் கவலைதான் காரணம்.''




''கரெக்ட், இப்ப சோனியா காந்திக்கும் ஏக கவலையிருக்கும். இந்த வயசுல எப்படி சிக்குனு, ஸ்மார்ட்டா வளைய வராங்க...''

''புரிஞ்சுடுத்துதானே... ஒவ்வொரு ஃபீல்டுலேயும் கவலை உண்டு. அதை ஒப்பனா காமிக்காம ரகசியமா கவலைப்படணும்.''

''சரி சரி நான் வீட்டுக்குப் போறேன். இப்ப பஸ் கிடைக்குமா? இன்னிக்கு ளோக்கு ரிப்போர்ட் கார்டு வரும். பாஸாயிருப்பானா? இவருக்கு மாத்தல்னு ஆபீஸ்ல பேச்சாம். பீகாருக்கு மாத்திடுவாங்களோ...''

''பாத்தியா கவலைப்பட ஆரம்பிச்சுட்டியா? வீட்டுக்குப் போய்ச் சேர்ந்துட்டு, தட்டு வழியச் சாப்பிட்டு, ஓரமா உட்கார்ந்து அரை மணி கவலைப்படு... யூ வில் பீ ஆல்ரைட்...''

கவலைப்படு மனமே... என்ன கவலைப் பட ஆரம்பிச்சுட்டீங்களா? ○

மலேசியாவின் மக்கள் தொகை 2 கோடியே 80 இலட்சம். இதில் 62 சதவிகிதத்தினர் 'பூமிபுத்ரா' என்ற மலாய்க்காரர்களும், 24 சதவிகிதம் சீனர்களும், 8 சதவிகிதம் இந்தியர்களும் அடங்குவர். மீதமுள்ள 6 சதவிகிதத்தில் பல்வேறு பூர்வ குடிமக்கள் இருக்கிறார்கள்.

மலேசியா, அப்போது மலேயாவாக இருந்த காலம். ஆங்கிலேயர்கள், தங்களின் காலனி ஆதிக்கத்தை, தென்கிழக்காசியாவில் நிலைநாட்டிக் கொண்டிருந்தார்கள். 1786இல் மலேயாவின் பினாங்கு தீவும், 1822ல் மலேயா தீபகற்பமும் முற்றாக அவர்கள் பாக்கெட்டில்.

மலேயாவின் இயற்கை வளத்தைக் கண்ட அவர்கள் அதை முற்றாகப் பயன்படுத்த எண்ணினார்கள். இவ்வளவு வளத்தையும் சுரண்டிச் செல்ல ஆள் பலம் வேண்டும்! எங்கே போவது?

காடுகளை அழிப்பதற்கும், பெரும் தோட்டங்களை நிர்மாணிப்பதற்கும் இந்தியர்களே பொருத்தமானவர்கள் என்று ஆங்கிலேயர்கள் கருதினார்கள். உடனே, தமிழ், தெலுங்கு பண்ணைத் தொழிலாளர்களைக் கொண்டு வந்தார்கள். இவர்களில் பெரும்பாலோர் தோட்டங்களை அமைக்கும்போது மலேரியா காய்ச்சலில் இறந்துபோனார்கள்.

நாட்டில் ஈய வளம் இருப்பதையும் வெள்ளைக்காரர்கள் கண்டுகொண்டு, அதற்குரிய தொழிலாளர்களை சீனாவிலிருந்து பிடித்தார்கள்.

மலாய்க்காரர்கள் பெரும்பாலும் கிராமங்களில் வசித்ததால் விவசாயமும், மீன் பிடித்தலும் அவர்களின் பிரதானத் தொழில்களாக இருந்தன. அவர்களிடம் நாட்டின் வளத்தைக் காட்டி விட்டால், சீக்கிரமே சுதந்திரம் கேட்பார்கள் என்ற அச்சத்தில், அவர்களை அப்படியே விட்டுவிட்டார்கள் வெள்ளையர்கள்.



ஏ.வி.எம்.ஹாஜா



**மலேசியப் பொருளாதாரத்தில் முன்னணியில் இருப்பவர்கள் மலேசியச் சீனர்கள்தான். அவர்களின் அயராத உழைப்பே இதைச் சாதித்திருக்கிறது!**



# மலேசியா 20-20

## தித்திக்கும் ஹிஸ்டரி!



தோட்டத் தொழிலாளர்களைத் தவிர்த்து வேறு பல இந்தியர்களும் மலேயாவுக்கு வந்தனர். அவர்கள் மெத்தப் படித்த உத்தியோகஸ்தர்கள் மற்றும் வணிகர்கள். அதில் மலையாளிகள், தமிழ் முஸ்லிம்கள், பஞ்சாபிகள், வங்காளிகள், குஜராத்திகள் அதிகம்.

மலேயாவின் இயற்கை வளம் ஒரு வரப்பிரசாதம். ரப்பர், செம்பனை, வெட்டு மரம், கொக்கோ, மிளகு, அன்னாசி, புகையிலை பெருமளவில் பயிரிடப்பட்டன. தாதுப் பொருட்களில் ஈயமும், பெட்ரோலியமும் நாட்டின் பொருளாதாரத்தை உயர்த்தின.

தோட்டத் தொழில் வளர்ச்சியிலும் நிர்வாகத்திலும் மலேசியா முதலிடத்தில் இருக்கிறது. பல நாடுகள் மலேசியாவிடம் அந்த நிர்வாகத் திறனைக் கற்றுச் செல்கின்றன. மலேசியப் பொருளாதாரத்தில் முதலிடத்தில் இருப்பது மலேசிய சீனர்களே. அதற்குக் காரணம் அவர்களின் அயரா உழைப்பும் தொலைநோக்குப் பார்வையும்தான். இவையே ஈயச் சுரங்க வேலையாட்களாக வந்த அவர்களை முதலாளிகளாக மாற்றின.

மலேசியா சுதந்திரமடைந்த பின்பு வெள்ளைக்காரர்களின் தோட்டங்களை வாங்கியவர்கள், அவற்றைத் துண்டுதுண்டாகப் பிரித்து விற்றார்கள். இதனால் வேலைகளையும் வீடுகளையும் இழந்து பரிதவித்தனர் தோட்டத் தொழிலாளர்கள். அவர்களின் பாதுகாப்பான வாழ்க்கைக்கு, அன்றைய மலேசிய இந்தியர் காங்கிரஸ் தலைவர் 'துன் சம்பந்தன்' தேசிய நல நிதி கூட்டுறவுச் சங்கத்தை ஆரம்பித்தார். துண்டாடப்பட்ட தோட்டங்களை வாங்கி, ஏழைத் தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்புகள் திருப்பிக் கொடுக்கப்பட்டன. தோட்டத் தொழிலாளர்களுக்குப் பங்கும் அளிக்கப்பட்டது. அவர்களின் பிள்ளைகள் மேற்படிப்புக்கும் போனார்கள்.

இந்தியர்கள், சீனர்கள்



நிலை? நாட்டின் வளர்ச்சிக்கு வித்திட்ட இந்த மக்கள், மலேயா சுதந்திரம் அடைந்தபின் தங்கள் நாட்டுக்குத் திருப்பி அனுப்பப் பட்டு விடுவார்களா? சுதந்திரத் துக்கு வித்திட்ட தலைவர்கள் அவர்களுக்குக் குடியுரிமை கொடுப்பது என்று ஒரு பரிகாரம் கொண்டு வந்தார்கள்! அதேசம யத்தில் மலாய்க்காரர்கள், தங் களின் உரிமைக்கு இந்தக் குடி யேற்றக்காரர்களால் பங்கம் ஏற் பட்டுவிடுமோ என்று அஞ்சினர். அவர்களின் அச்சத்தைப் போக்க, அரசாங்கம் மலாய்க்காரர்களுக்குச் சிறப்பு உரிமைகளை வழங்கியது: மலாய்க்காரர்களுக்கு அளிக்கப் படும் உரிமைகளில் புதிதாகக் குடி யுரிமை பெற்றவர்கள் தலையிடக்



கூடாது. அதேசமயத்தில் குடி யுரிமை பெற்றவர்கள் தங்களின் சமயம், மொழி, கலாசாரத்தை சுதந்திரமாகப் பேணலாம்.

சீனர்கள் உடனே குடியுரிமைக் குப் பதிவுசெய்து கொண்டார்கள். சுமார் 60,000 இந்திய தோட்டத் தொழிலாளர்கள் இந்தியாவுக்குத் திரும்பிவிட்டனர்.

மலேசியாவில் கட்டடத்



* மஹாதீர் முகம்மது

துறையில் சீனர்களை மிஞ்ச முடியாது. வானுயர்ந்து நிற் கும் கட்டிடங்களில் சீனர் களின் பங்கு அளப்பரியது. இந்தியர்கள், டெலிகம்யூனி கேஷன், துறைமுகம், டெலி விஷன், ஸ்டீல் ஃபேப்ரிகே ஷன் (Steel Fabrication) போன்ற துறைகளில் டாப்.

மூலப்பொருள் ஏற்றுமதி செய்யும் நாடாக இருந்த மலேசியா, உற்பத்திப் பொருள் செய்யும் நாடாக மாறியது 1957ல். இதே காலகட்டத்தில் ஜப்பானியத் தொழிற்சாலைகள் நாடெங்கும் திறக்கப்பட்டன.

மஹாதீர் முகம்மது பிரதமராக இருந்த காலத்தில், 'கிழக்கு முக கொள்கை' (Look East) என்ற முழக்கத் தோடு ஜப்பானின் 'பணி கலாசாரத்தை' மலேசியா கடைப்பிடிக்க வேண்டுமென்று அறைகூவல் விடுத் தார்.

அதன் விளைவு? நேரங்கள் மதிக்கப்படுகின்றன. நாட்டின் உற்பத்தித் தரம் உயர்ந்தது. வேலை நிறுத் தங்கள் அரிது. தொழிற்சங்கங்கள் தங்களின் கோரிக்கை களைப் பேச்சுவார்த்தை மூலமே தீர்த்துக்கொள்கின்றன.

**மலேசியாவில் உற்பத்தியாகும் பொருட்களில் 80 சதவிகிதம் ஏற்றுமதியாகிறது.**

மலேசியாவில் உற்பத்தியாகும் பொருட்களில் எண் பது சதவிகிதம் ஏற்றுமதியாகிறது. அரசாங்கம், ஏற்று மதிக்கு உகந்த போக்குவரத்துச் சாலைகள், துறைமுகங் கள், சுறுசுறுப்பாக இயங்கும் சுங்க இலாகா போன்ற வற்றைத் தரமாகத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத் திருக்கிறது.

எல்லா அரசாங்க இலாகாக்களும் அதிவேகமாகச் செயல்பட 'ஒன் ஸ்டாப் சர்வீஸ்', 'டெலிவரி சிஸ்டம்' என்ற முறைகள் அறிமுகப்படுத்தப்பட்டிருக்கின்றன.

'மலேசியா 2020' என்ற தொலைநோக்கில் இன்னும் பத்தாண்டுகளில் மலேசியா வளர்ந்த நாடாகிவிடும். 'ஹைடெக்' தொழிற்சாலைகள் நாடெங்கும் அமைக்கப் பட்டு வருகின்றன. இதற்கேற்ற பட்டதாரிகளை, மலே சிய கல்லூரிகள் இப்பொழுதே தயார் செய்கின்றன.

# நீங்கள் கேட்டவை

## தராசு

● மல்லிகை மன்னன், மதுரை

? வாக்காளர்களின் காலில் விழுந்தாவது பா.ம.க.வை பென்னாகரம் தொகுதியில் வெற்றி பெறச் செய்வோம் என்று ராமதாஸ் சபதம் செய் திருக்கிறாரே?

! கொள்கைகளையும் திட்டங் களையும் முன்வைத்து ரைட் ராயலாக வோட்டுக் கேட்பதை விட்டுவிட்டு, இப்படிச் சுய கௌரவம் இழந்து பேசுவது, வோட்டுப் பெற குறுக்கு வழி களில் ஒன்றுதான். ஆனால், மக் களது காலில் விழுவதால் தமக்கு வோட்டு விழும் என்று அவர் போடும் கணக்கு தப்பு!



* செவிடன் காதில்...

# ரஜினியின் கோரிக்கை குறித்து..?



* ஆதங்க அரசர்!

● பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு

? நாள்தோறும் உயர்ந்துவரும் விலைவாசியைப் பார்த்தால், பொருட்களின் விலைப்பட்டி யலை வாசிக்கத்தான் முடியுமே தவிர, வாங்க முடியாது போலி ருக்கே?

! உண்மைதான். ஆனால், உங்க வீட்டுல பழங்கால மளிகை பில் ஏதேனும் இருக்குமானால், அதைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விட முடியும்.

● ச.விடுதலை மலர், வெளிப்பட்டினம்

? எத்தனையோ நல்ல திட்டங்களைத் தாம் கொண்டு வந்தும் கம்யூனிஸ்டுகள் தமக்குப் பாராட்டு விழா நடத்தவில்லை என்று கலைஞர் ஆதங்கப்பட்டிருக் கிறாரே?

! ஏராளமான விருதுகளையும் பாராட்டு விழாக்களை

யும் பெற்றுப் பரவசமடைந்துள்ள கலைஞருக்கு, இப்படி ஓர் ஆதங்கத்தையாவது விட்டு வைத்திருக்கும் கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்களுக்கு ஒரு பாராட்டு விழா நடத்தலாம்!

● **ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி**

*? தமிழகத்தில் குடிசைகளே இல்லாத நிலை உருவாக வேண்டும் என்று ஸ்டாலின் கூறியுள்ளாரே?*

! நடக்காத காரியம். கிராமப்புறங்களிலிருந்து பிழைப்புத் தேடி நகரங்களுக்கு வருவோர் இருக்கும்வரை புதிய குடிசைகள், சேரிகள் உருவாகிக்கொண்டேதான் இருக்கும். குடிசை மாற்று வாரியத்துக்கு வேலை இருக்கும். கிராமப்புறப் பொருளாதாரம் மேம்படுவதுதான் பிரச்னைக்குத் தீர்வு. ஆனால், அதை யார் நினைக்கிறார்கள்? வோட்டையும் அதோடு இன்னொன்றையும்தான் எண்ணுகிறார்கள்.



✱ உணரா வாக்கியம்!

● **யுவஸ்ரீ ப்ரியன், சென்னை-24**

*? 'மன்னித்த தமிழ் நெஞ்சங்களுக்கு நன்றி' என தினசரிகளுக்கு விளம்பரமாகவே தந்துள்ள நடிகர் ஜெயராம் பற்றி...?*

! இத்தகைய சினிமாத்தனமான அறிவிப்பைக் காட்டிலும் ஜெயராம் மன்னிக்கப்படுவதற்குத் தம்மைத் தகுதி உள்ளவராக்கிக் கொள்வது அதிமுக்கியமானது.

● **அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21**

*?' சினிமா தொழிலாளர்களுக்காக அரசாங்கம் கட்டிக் கொடுக்கும் வீட்டுக்காக, வசதி உள்ளவர்கள் கை நீட்டாதீர்கள்' என்று ரஜினி கேட்டுக்கொண்டிருக்கிறாரே?*

! அரசாங்கமே, ''வருமான வரம்புக்கு உட்பட்டவர்களுக்காகத்தான் திட்டம் செயல்படும்'' என்று அறிவித்தால் அன்றி ரஜினியின் கோரிக்கை செவிடன் காதில் ஊதிய சங்குதான்.

● **பத்மா ராமமூர்த்தி, சோழிங்கநல்லூர்**

*? ஐந்து முறை லோக்சபா சபாநாயகர் வாய்ப்பளித்தும், மத்திய அமைச்சர் அழகிரி அவரைச் சந்திக்காதது ஏன்?*

! ஏன் என்பது அழகிரிக்குத்தான் தெரியும். அவரைக் கட்சித் தலைமை இது குறித்துத் தட்டிக் கேட்காதது ஏன் என்பது எல்லோருக்கும் தெரியும்!

● **ஆர்.ராஜதுரை, சீர்காழி**

*? ''மது விற்பனையில் கிடைக்கும் வருமானம் பாவத்தின் சம்பளம் என்பதை தமிழக அரசு உணர வேண்டும்'' என்கிறாரே தமிழருவி மணியன்?*



✱ வென்ற நீதி

! உணர்வதாவது? 'பாவத்தின் சம்பளம்' என்பது பாவ-புண்ணியத்தில் நம்பிக்கை உள்ளவர்களுக்குத்தான். இன்றைய ஆட்சியின் மனோ'பாவம்' அறியாமல் பாவம்-புண்ணியம் பற்றிப் பேசியிருக்கிறார், பாவம்!

● **பா.அசோக், பிள்ளையார்குளம்**

*? தமிழகத்தில் ஒரு மாதத்துக்கு 84 கோடி சிகரெட்டுகள் விற்பனையாமே... ஆய்வு முடிவு*

திர்ச்சி தருகிறதே?

அதன் பின்விளைவு என்ன? புகைப் பாரின் உடல்நலம் எவ்வாறெல்லாம் ாதிக்கப்பட்டிருக்கிறது என்று ஆராய்ந் ால், அதிர்ச்சி பன்மடங்காகும். மீடியா திபர்கள் இணைந்து மது -சிகரெட்டுக்கு திராக ஒரு பிரசார இயக்கம் நடத்தலாம். துகிற சங்கை ஊதியாச்சு... விடியறப்போ விடியட் ம்!

**எஸ்.உஷா சுதர்சன், திருச்செங்கோடு**

*? ஹாக்கி வீராங்கனைகள், ஆண்களுக்கு நிகராகச் சம்பளம் கோருவது பற்றி 'தராசு' கருத்து என்ன?*

! இருதரப்பிலும் முயற்சி சமமாக இருப் பினும் திறன் வேறுபடத் தான் செய்யும். அதற்கேற் பவே ஆட்டத்தின் தரம் அமையும். மேலும், பார்வையாளரின் எண்ணிக்கை, கிடைக்கும் ஒட்டு மொத்த வருமானம் போன்றவற்றையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும் அல்லவா? ஆட்டத்தில் மட்டுமின்றி கோரிக்கையிலும் நியாயம், நேர்மை தேவை.



✱ எட்டாத கனவு!

✱ தப்புக் கணக்கு!

● **செல்.பச்சமுத்து, வேப்பந்தட்டை** ✱

*? கட்-அவுட் கலாசாரம் என்று ஒழியும்?*

! வீண் ஆடம்பர அரசியலுக்கு மக்கள் 'கெட் அவுட்' சொல்லும்போது!

● **பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி**

*? சென்னை புறநகர் போலீஸ் கமிஷனர் 'ஜாங்கிட்' பற்றி அவதூறு எழுதிய வார இதழ் ஆசிரியர் ஏ.எஸ். மணிக்கு ரூபாய் பத்து லட்சம் அபராதம் விதித்து ஹைகோர்ட் தீர்ப்பளித்துள்ளது பற்றி...?*

! நேர்மையான பத்திரிகையாளர்கள் வணங்கி வரவேற்கக்கூடிய தீர்ப்பு!

❑ ரூ.150/- பரிசு பெறுபவர்:
**இரா.வசந்தராசன், அரூர்**

✱ ரூ. 75/- பரிசு பெறுபவர் :
**செல்.பச்சமுத்து, வேப்பந்தட்டை**

● **இரா.வசந்தராசன், அரூர்** ❑

*? 'சிறைவளாகத்திலேயே ஓர் அறையில் கைதியை மனைவியுடன் ஓரிரு நாட்கள் தங்க வைக்க நடவடிக்கை எடுக்கலாம்' என்ற மும்பை நீதி மன்றத்தின் பரிந்துரையைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்...?*

! சிறையில் நிலவும் பாலியல் ஒழுங்கீனத்துக்குத் தீர்வாக இந்த ஆலோசனை வழங்கப் பட்டிருக்கலாம். நமது குற்ற இயல் சட்டத்தில் parole என்பதாக ஒரு சொல் உண்டு. அதற்குத் தகுதி பெற, கைதிகள் தங்கள் நன்னடத்தையால் முயற்சி செய்ய வேண்டும். அத்தகுதியை வளர்த்துக் கொள்ள, சிறை அதிகாரிகள் கைதியை ஊக்குவிக்க வேண்டும். இதை விடுத்து, மும்பை நீதிமன்றத்தின் பரிந்துரையை ஏற்றால், புதிய பிரச்னைகள், மோசமான பின்விளைவுகள் உருவாகும்.

# டெலி கூத்து!



* 'வாடகை வீடு' தாயி

''நீங்கள் 'வாடகை வீடு' பார்க்கறீங்களா... அப்ப உங்களுக்குச் சொந்த வீடு நிச்சயம்'' என்கிறார் எம்.விஸ்வநாதன். அதென்ன 'வாடகை வீடு?' யார் இந்த எம்.விஸ்வநாதன் என்கிறீர்களா...? 'வாடகை வீடு' - ஸ்ரீ காமாட்சி விஷன் சார்பில் சிங்கப்பூரைச் சார்ந்த தொழிலதிபர் ஸ்ரீராம்வேதம் தயாரிக்கும் டீ.வி.தொடர். இந்தத் தொடரின் இயக்குநர்தான் விஸ்வநாதன்.

அது சரி... அதென்ன வாடகை வீடு பார்த்தா சொந்த வீடு...? கலைஞர் டீ.வி.யில பிப்ரவரி 15லிருந்து மதியம் 12.00 முதல் 12.30 வரை ஒளிபரப்பாகும் வாடகை வீடு சீரியலைத் தொடர்ந்து பார்க்கும், வாடகை வீட்டில் குடியிருக்கும் நேயர்களுக்கு ஒரு போட்டியையும் அறிவித்திருக்கிறது தயாரிப்பாளர் தரப்பு. ''தொடரின் முடிவில் கேட்கப்படும் கேள்வியை மையமாக வைத்து குலுக்கல் போட்டி ஒன்றை நடத்த இருக்கிறோம். இதில் 20 லட்சம் மதிப்புள்ள வீடுகள் இருவருக்கு வழங்கவிருக்கிறோம்'' என்கிறார் தயாரிப்பாளர் ஸ்ரீராம் வேதம். இதாங்க... வாடகை வீடு பார்த்தா சொந்த வீடு நிச்சயம்!

*(கனவு இல்லமா இருக்குமா?)*

'' 'தங்கம்' தொடரின் நாயகி ரம்யாகிருஷ்ணனோடு இணைந்து நடிக்க இதோ ஓர் நல்வாய்ப்பு'' - இப்படித்தான் சொல்கின்றனர் சின்தால் நிறுவனத்தினர். சின்தால் சோப்பைத் தயாரிக்கும் கோத்ரெஜ் நிறுவனம், 'சின்தால் சருமப் பாதுகாப்பு சவால் போட்டி' ஒன்றை அறிமுகப் படுத்த உள்ளது. இதில் பங்குபெற விருப்பம் உள்ளவர்கள், மொபைல் ஃபோனிலிருந்து Cinthol (space) name (space) age (space) address டைப் செய்து 56767 என்ற எண்ணுக்கு எஸ்.எம்.எஸ். அனுப்ப வேண்டுமாம். முதல் கட்டத் தேர்வு சென்னை, மதுரை,



* கே.பாலசந்தர்

# வாடகை வீடும்... சொந்த வீடும்!



களில் நடக்கவிருக்கிறதாம். இதில் செலக்ட் ஆனவங்களுக்கு, சென்னையில் இறுதிகட்டத் தேர்வு ரம்யா கிருஷ்ணன், சருமப் பாதுகாப்பு நிபுணர்கள் முன்னிலையில் நடக்குமாம். அதில் செலக்ட் ஆகறவங்களுக்கு 'தங்கம்' தொடரில் ரம்யா கிருஷ்ணனோடு நடிக்கும் வாய்ப்பு ஜாக்பாட்! போட்டி என்னன்னு கேட்கறீங்க... அது ஆன் தி ஸ்பாட்!

***(கவுந்துட்டீங்களே தலைவா!)***

"ஒரு படத்துல கதைக்கு அப்புறம் நம்மை அதிகமாகக் கவர்ற விஷயம் பாட்டு. இப்பவும் சில பாட்டைக் கேட்கும் போதும், பார்க்கும்போதும் மனசை அள்ளும். அப்படிப்பட்ட பாடல்களை எப்படி உருவாக்கினோம், எப்படிப் படம் பிடிச்சோம்னு சம்பந்தப்பட்ட டைரக்டர் சொன்னா, அந்த அனுபவம் குல்பி ஐஸ் சாப்பிடற மாதிரி குளுகுளுன்னு இருக்குமில்லையா... அப்படி ஒரு ப்ரோகிராம் கலைஞர் டீ.வி.யில ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் இரவு 10.30லிருந்து 11.00 மணி வரைக்கும் ஒளிபரப்பாகுது. ப்ரோகிராம் பேர் என்ன? 'காதோடுதான் நான் பேசுவேன்'. டைட்டில் கவிதையா இருக்கே...? யார் பேசுவாங்க...? இயக்குநர் சிகரம் கே.பாலசந்தர்தான்! அவர்கிட்ட பேசிப் பேசி அனுபவங்களைக் கறக்க இருக்கிறார்கள் பிரபல இசைக் கலைஞர் மீரா கிருஷ்ணன், பின்னணிப் பாடகி மஹதி.

***(நாக்க மூக்க பாட்டு எப்படி உருவாச்சுன்னு சொல்வாரா?)***

– மகிமைராஜன்



* ரம்யா கிருஷ்ணன்

# புதுக்கோட்டையிலிருந்து 50 ஆயிரம் சரவணன்கள்!



'புதுக்கோட்டையிலிருந்து சரவணன்' படத்திலிருந்து...

மலேசியாவின் கோலாலம்பூர் இன்டர்நேஷனல் விமான நிலையத்திலிருந்து நகரத்துக்குச் செல்லும் ஹைவேயில் வழுக்கிக்கொண்டு மணிக்கு 140 கி.மீ. வேகத்தில் பறந்துகொண்டிருந்தது அந்த கார். வானத்தில் மிதக்கும் சந்தோஷம் ஏற்பட்டது அந்த காரில் பயணம் செய்துகொண்டிருந்த பத்து இளைஞர்களுக்கும். சுங்கச் சாவடியை நெருங்கியதும், காரின் வேகத்தைக் குறைத்தார் டிரைவர். "நீங்க எல்லாம் வேலைக்கான பர்மிட் இல்லாம டூரிஸ்ட் விசாவுலதான் மலேசியா வந்திருக்கீங்க. மாட்டிக்கிட்டீங்கன்னா ஜெயிலுக்குப் போகவேண்டியதுதான். கையில் பத்து ரிங்கிட் மட்டும் வெச்சுக்கிட்டு, மீதியை என்கிட்டே கொடுத்திடுங்க. காசு கொடுத்து நான் போலீஸைச் சமாளிச்சுக்கிறேன்!" என்றார் கூட வந்த மலேசிய ஏஜென்ட். அந்த இளைஞர்கள் காருக்குள்ளே ஒருவர் முகத்தை ஒருவர் பயத்துடன் பார்த்தபடி உட்கார்ந்திருந்தார்கள். பிரச்சனை இல்லாமல் சுங்கச்சாவடியைக் கடந்த கார், இரண்டு கிலோ மீட்டர் தாண்டி நின்றது. "எல்லோரும் லக்கேஜை எடுத்துக்கிட்டு கீழே இறங்கிக்குங்க. இன்னும் அரைமணியில உங்களை வேலைக்கு எடுத்துக்கப் போகும் கம்பெனியின் வேன் வரும். மலேசியாவுல வேலை கிடைச்சு, சம்பாதிக்க ஆரம்பிச்சதும், இந்த அண்ணனை மறந்துடாதீங்கப்பா!" என்று சிரித்துக்கொண்டே சொன்னார் ஏஜென்ட். காரிலிருந்து இறங்கிய அந்த இளைஞர்கள் அங்கேயே நிற்க, அடுத்த நிமிடம் ஏஜென்ட்டின் கார் புறப்பட்டு விரைந்து மறைந்தது. தாங்கள்

ஏமாற்றப்பட்டு விட்டோம் என்பதை அறியாமலேயே, அந்த இளைஞர்கள் நிர்க் கதியாக நின்றுகொண் டிருந்தார்கள்.



அடுத்த சிலமணி நேரத்தில் பிளாட்பாரத் தில் நிற்பவர்கள் கண் ணில் தமிழ் முகங்கள் பட்டவுடன், அவர்களிடம் தங்கள் சோகக்கதையை இந்த இளைஞர்கள் சொல்லி அழுவதும், அவர்கள், "போலீஸ் கண்ணில் படாமல் ஜாக்கிரதையாக இருங்கள்" என்று எச்சரித்துவிட்டு, உள் ளூரில் உள்ள வேலை வாங் கித் தரும் ஏஜெண்ட்களிடம் அவர்களை அழைத்துக் கொண்டு போய் விடுவதும் அடுத்தகட்ட வாடிக்கை. இது 'புதுக் கோட்டையிலிருந்து சரவணன்' படக் கதையல்ல. நிஜ சரவணன்களின் வாழ்க்கை! "வேலை பர்மிட் இல்லை; போலீஸ் கண்ணில் பட்டால் கம்பி எண்ண வேண்டியது தான்" என்று சொல்லியே, அவர்களை அடிமாட்டுச் சம்பளத்தில் ஹோட்டல்களில் வேலைக்குச் சேர்த்து விடுவார்கள் வேறு ஏஜெண்ட்கள். லட்சக்கணக்கில் கடன் வாங்கி வந்த தமிழ் இளைஞர்கள் தங்க இடம், சாப்பாடு, கையில் வெறும் நூறு அல்லது இருநூறு வெள்ளி சம்பளத்துடன் சோகம் கவ்வத் தொடர்கின்றனர் மலேசிய வாழ்க்கையை.



இதுபோல ஐம்பதாயிரம் பேர் சட்டத்துக்குப் புறம்பாக மலேசியாவுக்குள் நுழைந்து வேலை செய்து கொண் டிருப்பதாகப் புள்ளிவிவரங்கள் தெரிவிக்கின்றன.

**ம**லேசிய அரசுக்கு இது தெரியாதா?

தெரியும்! ஆனால், அந்த விஷயத்தில் அவர்கள் கண்டிப்பு காட்டத் தயாராக இல்லை. அவ்வப்போது கண்துடைப்புக்காக ரெய்டு நடத்தி ஆட்களைப் பிடித் துக்கொண்டு போய், முகாம்கள் எனப்படும் தற்காலிகச் சிறைகளில் அடைக்கிறார்கள். கறாராக நடவடிக்கை எடுத்து அத்தனை பேரையும் விரட்டிவிட்டால், அடுத்த நாளே மலேசியா முழுவதிலுமாக இயங்கும் ஆயிரக்கணக்கான ஹோட் டல்களில் வேலைக்கு ஆள் இல்லாத் திண்டாட்டம் ஏற் பட்டு அவற்றை இழுத்து மூட வேண்டியதுதான்.

இங்கிருந்து அங்கே சென்ற இளைஞர்களும், வேலை பறிக் கப்பட்டு, ஊர் திரும்புவதை விட, எல்லாவிதமான கஷ்ட நஷ்டங்களையும் பொறுத்துக் கொண்டு அங்கேயே (சட்டத் துக்குப் புறம்பாக) வேலை செய்வதையே விரும்புகிறார்கள். காரணம், அவர்கள் மலேசியா வருவதற்காகப் பட்ட கடன் தான்!

# மயில் போல

**23** வயதே நிரம்பிய புதிய இசையமைப்பாளர் ஜோகன். இவர் முதலில் இசையமைத்த படம் 'அய்ம்புலன்' இன்னும் வெளிவராத நிலையில், அந்தப் பாடல்களைக் கேட்டுவிட்டு 'குறுநில மன்னன்' படவாய்ப்பு வந்திருக்கிறது.

ஜோகன் , சித்தார் இசைக் கலைஞர் தேவராஜன் பிள்ளையின் பேரன். தம் தாத்தாவிடம் கர்நாடக இசையைக் கற்ற இவர், மாஸ்டர் நித்யானந்தத்திடம் இந்துஸ்தானியும் மேற்கத்திய இசையும் கற்றிருக்கிறார்.

**''குறுநில மன்னன் வாய்ப்பு?''**

''நான் 'அய்ம்புலன்' படத்தில் இசையமைத்த 'மயிலே மயிலே இறகு போடு' பாடல் பிடித்துப் போனதால் வந்த வாய்ப்பு இது. இதுவும் ஒரு கிராமியக் கதைதான். முழுமையான நேட்டிவிட்டி சப்ஜெக்ட். படத்தில் மருதுபாண்டியர் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கி ஒரு பாட்டுக்குள் கொண்டு வந்திருக்கிறார் கவிஞர் நா.முத்துக்குமார்.

'மருதுபாண்டி வீரத்தோட கதையைக் கொஞ்சம் கேளுங்க/ பெரிய மருது சின்ன மருது அண்ணன் தம்பிதானுங்க/ முன்னவரோ வேட்டையிலே வேங்கைப்புலிதானுங்க/ பின்னவரோ நாட்டையாளும் சூரப்புலிதானுங்க' என்கிற அந்தப் பாடல் மண் வாசனையோடு மலர்ந்துள்ளது'' என்கிறார்

முதலிரண்டு படங்களிலேயே சித்ரா, விஜய் யேசுதாஸ் போன்ற நட்சத்திரப் பாடகர்களைப் பாட வைத்ததில் பெருமைப்படுகிறார்.

**''இசையமைப்பில் யார் உங்கள் முன்னுதாரணம்?''** என்று கேட்டால், ''எம்.எஸ். விஸ்வநாதன், இளையராஜா, ஏ.ஆர். ரஹ்மான் மூவரும் எனக்கு மும்மூர்த்திகள்'' என்கிறார்.

**''இசைக்குத் தொழில் நுட்பம் எந்த அளவுக்கு அவசியம்?''**

''மோனோ ரெக்கார்டிங் காலத்தில் எம்.எஸ்.வி இருந்தார். அவர் காலத்திலேயே இரண்டு ஸ்பீக்கர் இசை. ஸ்பீக்கர் மாறி ஸ்டீரியோ ரெக்கார்டிங் காலத்தில் ராஜா இசையமைத்தார். ஸ்டுடியோவில் மாடர்ன் தொழில்நுட்பம் வளர்ந்த காலத்தில் ரஹ்மான் வந்தார். இப்படி தொழில்நுட்பம் மாறிக்கொண்டே வந்திருக்கிறது. இசையை மேம்படுத்த, தவிர்க்க முடியாத இந்த முன்னேற்றங்கள் தேவை'' என்கிறார்.

**''வாத்தியங்களின் வலிமையில் பாடல் வரிகள் அமுங்கி விடுகின்றனவே...?''** என்றால் ''நான் சின்னஞ்சிறு இளைஞன் இது பற்றி பெரிதாகப் பேசக்கூடாது. பாடலுக்கு அடையாளமே அதற்குரிய வரிகள்தான்'' என்கிறார்.

● ● ●



ஜோகன்

# வாய்ப்பு ஒண்ணு!

ஆறுவாயிரம் படங்களில் ஸ்டன்ட் நடி
கவும் நாற்பது படங்களுக்கும் மேல்
ன்ட்மாஸ்டராகவும் பணிபுரிந்திருக்கும்
ஞ்ச்' பரத், இயக்குநராக அறிமுகமாகும்
ம் 'இந்திர சேனா'.

''டாக்டர் சீனிவாசன் நடிக்கும், 'உனக்
 ஒரு கவிதை', 'நானே வருவேன்',
ங்களுக்கு நான்தான் சண்டைக் காட்சிகள்
மைத்திருக்கிறேன். படப்பிடிப்பில் அவ
ரும் எனக்கும் இடையே ஏற்பட்ட நட்
 புரிதலுமே, இந்தப் பட வாய்ப்
புக் காரணம்'' என்கிறார்
றியுடன்.

அது என்ன 'இந்திர
னா?' ''சேனா - அப்பா,
ந்திரா - மகள். அப்பா -
ள் பாசத்தை யதார்த்த
கச் சொல்லும் படம்
து'' என்கிற 'பஞ்ச்'
த். ''சேனா ஒரு
ாலீஸ்காரர். இந்திரா டென்
ிஸ் வீராங்கனை. ஒரு போட்
க்காக கேரளா போனவிடத்
ில் இந்திரா காணாமல்
ாக, தேடுகிறபோது இளம்
ெண்களைக் கடத்தி பாலியல்
தாழிலில் ஈடுபடுத்தும் கும்
லின் வேலை இது என்று புரி
றது. பாசக்கார அப்பா, மோசக்
ாரர்களிடமிருந்து மகளை எப்
படி மீட்கிறார் என்பதுதான்
மீதிக் கதை'' என்கிறார். இவ
து தொழில் ஈடுபாட்டைப்
பார்த்து 'பாபா சினி கம்
பைன்ஸ்' நிறுவனம் இயக்குநர்
வாய்ப்பு வழங்கியிருக்கிறது.

இந்திரசேனா படத்திலிருந்து...



# அரங்கேறிய கல்யாண குணங்கள்!

**ய**துகுலகாம்போதி ராகத்துக்குத் தனியானதோர் அழகு உண்டு. நன்கு நனைத்துப் பழகிய பட்டுத் துணியின் துவளல். அதே சமயத்தில் ஒரு கம்பீர கௌரவம். பழைமையின் ஆழமான நிதானம்; லாவண்யமான நெளிவு சுளிவுகளினூடே சரடு போல ஓடும் ஒரு திருத்தம்... இத்தனை குணங்களையும் உள்ளடக்கி ஒளிர்ந்தது கிருஷ்ணா சிதம்பரத்தின் நாட்டியம். பார்த்தசாரதி சுவாமி சபாவுக்காக கிருஷ்ணா அண்மையில் வழங்கிய நிகழ்ச்சியில் யதுகுலகாம்போதி ராக ஜதிஸ்வரமும் இடம்பெற்றது. அந்த அபூர்வ ஜதிஸ்வரத்தின் கல்யாண குணங்களை மட்டுமின்றி, பரதநாட்டியத்தின் உள்ளடக்கமான அர்ப்பணிப்பு பாவத்தையும் குரு சி.வி.சந்திரசேகரிடமிருந் கிருஷ்ணா பக்தி சிரத்தையுடன் பெற் ஆடினார்.

புஷ்பாஞ்சலியுடன் பளிச்சென்று ஆர பித்தது நிகழ்ச்சி. இரண்டு இராகமாலின கனை உள்ளடக்கியது. ஒன்று சிவன் பேரி அஷ்டபதி; மற்றொன்று 'மாசில் அயோத்த் என்ற ஸ்ரீராமாவதார தாலாட்டு. இவற்றி சஞ்சாரிகளும் நிருத்தமும் இழைத்துக் க டப்பட்டிருந்தாலும், அடுத்தடுத்து ராக கள் மாறிக்கொண்டே போனதில் சற்றே தளர்வு கண்டது நிகழ்ச்சி.

சிவஅஷ்டபதி என்பது காஞ்சி மட தின் 69வது பீடாதிபதி இயற்றிய ஸ்துர் என்றும், அதன் தமிழ் மொழிபெயர்ப் வடிவத்தை (தமிழாக்கம் கல்யாணி ராஜ ராம்) வழங்குவதாகவும் அறிவித்து விட்( ஆடினார் கிருஷ்ணா. சொந்தக் குரலில் நல்ல தமிழில், மிகையான பாவமின்றி அவர் செய்த நிகழ்ச்சி அறிவிப்புகள்கூட அந்த மாலை நேரத்துக்கு மெருகு சேர்த் தன.

பிரதானமாக புருஷ (சிவன், ராமன், பாவனைகளை வெளிப்படுத்திய நிகழ்ச் சிக்கு, சிகையலங்காரமாக பின்னலுக்குப் பதில் கொண்டை அமைந்ததுகூடப் பொருத்தமாகவே தோன்றியது. ஜடையின் உற்சாகத் துள்ளல் சிருங்காரத்துக்குத்தானே அதிகப் பொருத்தம்? அன்றைய நிகழ்ச்சியில் காதல் ரஸப் பிரதானம் கடைசி ஜாவளியில் மட்டுமே.

குரு சந்திரசேகரின் நட்டுவாங்கம் நிகழ்ச்சிக்கு நங்கூரம். ப்ரீதி மஹேஷ் நன்றா கப் பாடினாலும் வழக்கமான மெருகு சற் றுக் குறைவுதான். வயலின், மிருதங்க, குழல் கலைஞர்கள் ஒன்றிவர, ஒளிய மைப்பு மேடையை அளவாக ஒப்பனை செய்ய, உயர் ரசனையின் உதாரணமாக நிறைவு தந்தது கிருஷ்ணாவின் நாட்டியம். ●

◆ சாயா ◆

Registered with the Register of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed t
post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.